# சைவ நற்சிந்தனை







**பண்பாளர் சி. செல்லத்துரை**

**நினைவு வெளியீடு**

**09-03-2008**

# சைவ நற்சிந்தனை

தொகுப்பு :

**சமூக சிந்தாந்த இரத்தினம் ஆர். எம். நாகலிங்கம்**
அகில இலங்கை சமாதான நீதிவான்
முன்னாள் பிரதம உள்ளக கணக்காய்வாளர்
தேசிய வீடமைப்பு அதிகார சபை

யாழ் – அரியாலைப்பதி

**பண்பாளர் சிதம்பரி செல்லத்துரை**

**நினைவு வெளியீடு**

**09-03-2008**

# சமர்ப்பணம்

*எங்களுக்கெல்லாம் முன்னறி தெய்வமாக இருந்து*

*நாங்கள் எல்லாம் வையத்தில் வாழ்வாங்கு வாழவேண்டி*

*தன்னையே உருக்கி வாழ்வாங்கு வாழ்ந்து காட்டிய எங்கள்*

*குடும்பதீபத்தின் நினைவுக் கலசமாகத் தொகுத்த*

**"சைவ நற்சிந்தனை"** *என்னும் இந்நூலை*

*எங்களை எல்லாம் அருள்பாலித்துக் காத்தருளும்.*

*அருள்மிகு வள்ளி தெய்வானை சமேத நல்லூர்க் கந்தனின்*

*கமல பாதங்களில் சமர்ப்பித்து*

*எங்கள் குடும்பதீபத்தின் ஆத்மா இறைவன் திருவடியில்*

*சாந்தியடைய வேண்டி வணங்குகின்றோம்.*

**அன்பு மனைவி,**

**பாசமிக்க பிள்ளைகள், மருமக்கள்,**

**பாசமிக்க பேரப்பிள்ளைகள், பூட்டப்பிள்ளைகள்**

**கண்டி வீதி,**

**அரியாலை, யாழ்ப்பாணம்.**

**09.03.2008**



# பொருள் அடக்கம்

# முன்னுரை

எங்கள் அன்புக்கும் மதிப்புக்குமுரிய யாழ் அரியாலைப்பதி பண்பாளர் சிதம்பரி செல்லத்துரை அவர்கள் 85 ஆண்டுகள் இப்பூவுலகத்தில் ஒரு சாதாரண நற்பிரஜையாக வாழ்வாங்கு வாழ்ந்து பெருமை பெற்றவர் அன்னாரின் நினைவுக் கலசமாகச் சைவமத வளர்ச்சிக்குப் பயன்படக்கூடிய ஒரு நூலை வெளியிடும் பொறுப்பை அமரரின் இளையோன் புஸ்பராதா என்னிடம் ஒப்படைக்க முன்வந்த பொழுது அதனை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டேன். சமூகக் குழுமியங்களின் வளர்ச்சிக்கும் உயர்ச்சிக்கும் அடிப்படையாகக் கொள்ள வேண்டிய காரணி எது? உயரிய ஒழுக்க, பண்பாட்டு விழுமியங்களைப் பேணுவது இன்றியமையாத காரணியல்லவா? ஒருவர் கல்வி, தொழில், பொருளாதாரம் போன்ற துறைகளில் வளர்ச்சிபெற்றால் மட்டும் போதாது உயர்ந்த ஒழுக்க, பண்பாட்டு விழுமியங்களை வளர்த்துக்கொள்வதன் மூலமே சமூக அந்தஸ்து பெற்ற ஒருவராக அவர் மதிப்புறுவார். எமது மதம் சைவமதமாகும். எங்கள் இனம் தமிழினமாகும். எனவே நாங்கள் பேண வேண்டியது சைவத்தமிழ் பண்பாடாகும். எங்கள் அடையாளச் சின்னமாக விளங்கும் இப்பண்பாடுகளை அழியாமல் பாதுகாக்க வேண்டியது எமது கடப்பாடாகும்.

இறைவழிபாட்டை கடைப்பிடித்து ஒழுகுவதற்குச் சைவ வாழ்வியல் முறையைப் பின்பற்றுவதற்குச் சைவத்தைப்பற்றிய சிந்தனைகள், சித்தாத்தம், கோட்பாடுகளை நாம் விளங்கிக் கொள்வதும் அவசியமல்லவா? எனவே எனக்கு வழங்கப்பட்ட வாய்ப்பைப் பயன்படுத்தி **“சைவநற்சிந்தனை”** என்னும் இம்மலரை பண்பாளர் சிதம்பரி செல்லத்துரை அவர்களின் **“ஞாபகக் கலசமாக”** தொகுத்து வெளியிடுவது மகிழ்ச்சிக்கும் பெருமைக்கு முரிய ஒரு நற்பணியாக உணருகிறேன்.

மறைந்த சைவ அன்பு நெஞ்சங்களின் ஞாபகார்த்தமாக கல்வெட்டுகள் என்ற பெயரால் நினைவு மலர்கள் வெளியிடப்படுகின்ற பாரம்பரிய மரபுமுறை உண்டு. அதில் தோத்திரப்பாடல்கள், சமயம் சார்ந்த கருத்துரைகள் இடம் பெறுவதோடு நினைவுக்குரியவர் பற்றிய பலதரப்பட்டவர்களின் உறவுமுறை புலம்பல்பாடல்களும் இடம் பெறுவதுண்டு. அத்துடன் திதிவெண்பா, வம்சாவளி தொடர்பூட்டல் அட்டவணை, நினைவுக்குரியவரின் பிறப்பு, இறப்பு திகதியுடன் முழுப்பக்க அளவிலான புகைப்படம் இடம் பெறுவதுண்டு. இத்தகைய மரபு சார்ந்த கல்வெட்டு மலரை ஒரு துடக்கு உணர்வுடன் எம்மக்கள் பார்க்கின்ற நிலை உண்டல்லவா? சுவாமி அறைகளுக்கும், ஆலயங்களுக்கும், சமயக்கிரியை நடைபெறும் இடங்களுக்கும் இத்தகைய மலர்களை எடுத்துச் செல்வதை மக்கள் தவிர்த்து வருவதையும் காண்கின்றோம். இத்தகைய மலரை வீட்டில் வைத்துப் பேணிக்காக்கின்ற நிலையும் தவிர்க்கப் படுகின்றது. அதனால் நினைவுப் பொக்கிசமாக அவை பயன்படும் என்ற எதிர்ப்பார்ப்பும் தோல்விகண்டு விடுகின்றது.

இது போன்ற காரணங்களால் புதிய முறையொன்றை உருவாக்க வேண்டிய தேவை உணரப்பட்டது. சைவமத நூல்களைப் படைப்பதில் முன்னணியில் இருந்து வருகின்ற சைவ அறிஞர்கள் வரிசையைச் சேர்ந்த கலாபூசணம், பண்டிதர் எஸ் அப்புத்துரை, கலாபூசணம், சைவப்புலவர் எஸ் செல்லத்துரை ஆகியோரின் வழிப்படுத்தல், பங்களிப்புடன் புதிய முறையொன்றை பின்பற்றி வருகிறோம். புதிய முறையைப் பின்பற்றி பல நினைவு மலர்களை வெளியிட்டுள்ளோம். இவ்வாறு வெளியிடப்பட்டுள்ள நூல்கள் பொது நூல் நிலையங்களின் பயன்பாட்டிற்கு ஏற்புடையதாக அங்கீகரிக்கப்படுகின்றது. இத்தகைய பொது நூல் நிலையங்கள் மூலம் நினைவு மலர்களை நிலையாகப் பேணிப் பாதுகாக்கப்படுவதற்கும் பலதரப்பட்ட மக்களும் பெரும் எண்ணிக்கையில் பயன்படுத்திக்கொள்ளவும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. இதன் மூலம் புதிய முறை எந்தளவிற்கு எமது எதிர்பார்ப்புகளை நிறைவு செய்கின்றது என்பதை அறிந்து கொள்ளமுடிகிறது.



இப்புதிய முறையை அனுசரித்து இந்த நினைவுமலரும் தொகுக்கப்பட்டுள்ளது. எதிர்பார்க்கும் நற்பலன்களை அடையக்கூடிய முறையில் இம்மலர் தொகுக்கப்படுவதற்கு பலரினதும் பங்களிப்பு கிடைத்துள்ளது என்பதை கூறிவைக்க விரும்புகிறேன்.

பன்னிரு திருமுறையிலிருந்து தொகுக்கப்பட்ட பாடல்கள், பிற தோத்திரப் பாடல்களிலிருந்து தெரியப்பட்ட பாடல்கள், அருச்சனைப் போற்றி போன்றன இம்மலரில் இடம் பிடித்துள்ளன. சைவக்கிரியை முறை, வழிபாட்டு முறை, சைவநற்சிந்தனைகள் சைவவாழ்வியல் முறை ஆகியன தொடர்பான கருத்தாக்கங்களும் இம்மலரில் இடம் பெற்றுள்ளன. பக்திமார்க்கத்தை வளர்த்துச்செல்வதற்கு இவைகள் உதவுவதோடு மட்டுமல்லாது அறிவுபூர்வமான சிந்தனைத் தெளிவுடன் சமய வழிபாட்டு முறையையும் குடும்பச் சடங்குகளுக்கான கிரியை முறைகளையும் பின்பற்றவும் பயன்படும்.

பலரினது முயற்சியின் திரண்ட விளைவாக உருவானதே இம்மலராகும். பங்களிப்புக்கு பாத்திரமான கல்விமான்கள், சமய அறிஞர்கள், கணனி தொழில் புலமை யாளர், பதிப்பக விற்பளர் ஆகிய அனைவருக்கும் நாங்கள் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளோம். அவர்களின் சமய, கல்வி, சமூகப்பணி மேலும் மேலும் சிறப்புற வேண்டுதல் செய்து வணங்குகிறோம்.

சமூக சித்தாந்த இரத்தினம்
**ஆர். எம். நாகலிங்கம்**
அகில இலங்கை சமாதான நீதிவான்
முன்னாள் பிரதம உள்ளக கணக்காய்வாளர்
தேசிய வீடமைப்பு அதிகார சபை.

# அணிந்துரை

**உடுவை எஸ். தில்லைநடராசா**
**மேலதிகச் செயலாளர், கல்வி அமைச்சு.**

## சிந்தனைகள் புதிதாக மலரட்டும்

பிறப்பும், இறப்பும் இயற்கை. இறவா வரம் பெற்று வாழும் மனிதர் இல்லை. வாழும் காலத்தே உறவுகளுக்கு ஊருக்கு உலகுக்குப் பயன்படத்தக்க வகையில் வாழ்வதே சிறப்பு. சிறப்பாற்றலால் வாழும் காலத்தே வாழ்த்துக்கள் பாராட்டுக்கள் புகழாரம் என்பவற்றுக்கு உரியராகின்றனர் சிலர்.

எழுத்து மூலமான பதிவுகளில் இடம் பெறாதவரையும் இறப்பின் பின், அந்தியேட்டியன்று கல்வெட்டில் பாட்டுடைத் தலைவனாக/தலைவியாக படத்துடன் பதிவுகளாக்கும் வழக்கம் நம்மிடையே நிலவுகின்றது. அண்மைக் காலத்தில் "கல்வெட்டு" என்றழைக்கப்படும் "புலம்பல்" "கலங்கல்" பாடல்களுக்குப் பதிலாக பலருக்கும் பயன்படும் விடயங்கள் பதிவுகளாக்கப்பட்டு நீத்தார் நினைவாக நிலைத்து நிற்கக்கூடிய ஆவணமாக வெளியேறுவதை அவதானிக்கக் கூடியதாக உள்ளது.

குடும்பத்துக்கு அப்பால் உறவினருக்கும் ஊரவர்களுக்கும் நல்ல மனிதராக வாழ்ந்த பண்பாளர் அமரர் சிதம்பரி செல்லத்துரை. எண்பத்தைந்து ஆண்டுகள் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வமாகிய சிதம்பரி செல்லத்துரையின் நினைவாக திருமுறை, புராணம், துதிப்பாடல்களுடன் வாழ்வியல் சிந்தனைகளும் கொண்ட தொகுப்பாக அமைந்துள்ளது "சைவ நற்சிந்தனை".

விஞ்ஞான வளர்ச்சி, புதுமைக் கண்டுபிடிப்புகள் மத்தியில் இறைபக்தியையும், சமய நம்பிக்கையையும் வளர்க்க வேண்டிய சமுதாயப் பொறுப்பு அவசியமாகின்றது. சமூகத்தில்



சகல தரப்பினரினதும் பெருமதிப்பைப் பெற்ற கலாபூஷணம் பண்டிதர் எஸ். அப்புத்துரை, கலாபூஷணம் சைவப்புலவர் எஸ். செல்லத்துரை போன்ற அறிஞர் பெருமக்களின் நெறிப்படுத்தலின் கீழ் தனது புதிய சிந்தனைகளுக்கு செயல்வடிவம் கொடுப்பதில் ஆர்வத்துடன் ஈடுபட்டு வருபவர் சமூக சித்தாந்த இரத்தினம் ஆர். எம். நாகலிங்கம். நாட்டுயர்வை நாடிய கூட்டுறவுத்துறையில் பலர் உருவாகவும், உழைக்கவும் அறிவூட்டிய விரிவுரையாளர் இவர். பின்னர் பிரதம உள்ளக கணக்காய்வாளர், நிறுவனத்திட்டமிடல் அதிகாரி ஆகிய உயர் பதவிகளில் சிறப்பாகக் கடமையாற்றி ஓய்வு நிலையிலும் மனிதர் உய்யவேண்டும், உயர வேண்டும் என உழைப்பவர்.

ஆர். எம். நாகலிங்கம் தொகுத்த "**சைவ நற்சிந்தனை**" மலர் அருமையான அட்டைப்படத்துடன், இறைவனின் பெருமையையும், அறிஞர்களின் ஆக்கபூர்வமான சிந்தனைகளையும் நம்மிடையே வாழ்ந்த நல்லவர் செல்லத்துரை பற்றிய நினைவுக் குறிப்புகளையும் உள்ளடக்கி அவரது பிள்ளைகளால் வெளியிடப்பெற்ற நூல் உங்கள் கரங்களை அடைந்துள்ளது.

கல்விக்கு முதலிடம் முக்கிய இடம் கொடுக்கும் சமூகத்தில் ஓரங்கமாகத் திகழ்ந்த பண்பாளர் செல்லத்துரையின் நினைவாக மலர்ந்துள்ள "சைவ நற்சிந்தனை" என்னும் இம்மலரில் செல்லத்துரை நினைவுப் புலமைப்பரிசில் நிதி பற்றிய தகவல்களும் சேர்க்கப்பட்டிருப்பது சிறப்பு.

இயற்கையை வெல்லமுடியாது. என்றாவது ஒருநாள் காலன் அழைத்துச் செல்லத்தான் செய்வான். காலன் அழைத்த பின்னும் காலத்தால் அழியாத பணிகளுக்கான சிந்தனைகள் புதிதாக மலர்கின்றன.

சிந்தனைகள் புதிதாக மலரட்டும்!
நீத்தார் நினைவாக பயன்நிறை பணிகள்
பலநூறு மலரட்டும்!!

முற்றும்

# பிரார்த்தனை உரை

**மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்**

சமய வளர்ச்சியும் சமுதாய வளர்ச்சியும் ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந்துள்ளன. மக்கள் அறிவுபூர்வமாகச் சிந்தித்து செயற்படும் பொழுது தான் அவர்கள் சார்ந்த சமயம் வளர்ச்சி பெற முடியும். சமய அறிவானது சமய சித்தாந்தம், கோட்பாடுகள், கொள்கைகள், நோக்கங்கள் ஆகியவற்றைக் கற்றுப் பெற்ற அறிவையும் அவற்றை தங்கள் வாழ்வியலில் கடைப்பிடித்துப் பெற்ற அனுபவத்தையும் உள்ளடக்கிய ஒன்றாகும். சமய வழி நின்று ஒழுக்கசீலராக, பிற உயிரை தன்னுயிர் போல் நேசிக்கும் பண்பாளராக, பஞ்சமா பாவச் செயல்களை விலக்கியவராக தினமும் “சிவாய நம” என்று தியானித்திருக்கும் மக்களைப் கொண்ட சமூகமே வளர்ந்த சமூகமாக பரிணமிக்க முடியும். அவ்வழியில் வளர்ந்து வரும் மக்கள் தான் தங்களின் சமய வளர்ச்சிக்கு தன்னலமற்ற முறையில் புனிதமாக தொண்டாற்ற முடியும். பிறரையும் அத்தொண்டில் ஈடுபடச் செய்வதற்கு உந்து சக்கதியாக விளங்க முடியும்.

எனவே முதற்கண் எமது சமயமான சைவசமயத் தைப்பற்றி நாங்கள் ஒவ்வொருவரும் தொடர்ச்சியாக விடாமுயற்சி செய்து சமய அறிவையும் அனுபவத்தையும் வளர்த்துக் கொள்ள வேண்டும்



இத்தகைய தேவையின் அவசியத்தை கருத்தில் **கொண்டு பண்பாளர் சிதம்பரி செல்லத்துரை** அவர்களின் நினைவுக் கலசமான இம்மலரின் பொருளடக்கம் அமையப் பெற்றமை கண்டு மகிழ்ச்சியடைகிறேன். சைவசமய அறிவை வளர்ப்பதை உலகச்சைவப் பேரவை அதனதுஒரு மூல நோக்கமாகக் கொண்டு தொழிற்பட்டுவருவதையும் இச்சந்தர்ப்பத்தில் நினைவுப்படுத்த விரும்புகிறேன். எனவே இம்மலருக்கு பிரார்த்தனை உரை வழங்குவதில் மனநிறைவும் மகிழ்ச்சியுமடைகிறேன்.

காலத்தின் தேவைக்கேற்ப இம்மலர் அமைவதற்கு காரணகர்த்தாக்களாக இருந்து செயற்பட்ட கல்விமான்கள், சமய அறிஞர்கள், சமூகத் தலைவர்கள், சமய சமூகப் பற்றாளர்கள் அனைவரையும் பாராட்டி வாழ்த்துவதோடு அவர்களின் நற்பணிகள் மேலும் மேலும் சிறப்புற்றுப் பயனளிக்க வேண்டிப் பிரார்த்தித்து அனைவருக்கும் உலகச் சைவப் பேரவையினது இலங்கைக் கிளையின் சார்பாக எனது பாராட்டையும் வாழ்த்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

**அமரர் சிதம்பரி செல்லத்துரை அவர்களின் ஆத்மா சாந்தியடைய பிராத்திக்கிறேன்.**

**கலாநிதி மு. கதிர்காமநாதன்**
அகில இலங்கை சமாதான நீதிவான்
பொதுச் செயலாளர்
உலக சைவப் பேரவை, இலங்கை கிளை.

# பதிப்புரை

நாமெல்லாம் ஒழுக்கத்தால், பண்பால், கல்வியால், தொழிலால், மனித நேயத்தால் சிறந்து ஓங்க வேண்டுமென்கிற இலட்சியக்கனவோடு வையகத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து குடும்பதீபமாய் பிரகாசித்தவர் தான் எங்கள் முன்னறி தெய்வமாம் யாழ் அரியாலைப்பதி பண்பாளர் சிதம்பரி செல்லத்துரை. அவர்களின் பிரிவுத்துயரில் ஆழ்ந்திருக்கும் இவ்வேளையில் அவரது ஆத்மா இறைவன் திருவடியில் சாந்தியடைய வேண்டியும் அவரை நன்றி உள்ளத்தோடு என்னென்றும் நினைவு கூரும் பொருட்டும் அவரின் பற்றுதலுக்குரிய சைவ நற்சிந்தனைகளையும் தோத்திரப்பாடல்களையும் கருப்பொருளாகக் கொண்ட ஒரு நூலை வெளியிடத்துணிந்தோம். எங்கள் பெருவிருப்பத்தைச் சமூக சித்தாந்த இரத்தினம் ஆர். எம். நாகலிங்கம் அவர்களுக்கு சமர்ப்பித்து அவ்விருப்பத்தைச் சிறப்புற நிறைவேற்றிவைக்கும் பொறுப்பையும் அவரிடம் ஒப்படைத்திருந்தோம். மிகக் குறுகிய காலத்தில் பயனுள்ள முறையிலும் அழகாகவும் **"சைவ நற்சிந்தனை"** என்னும் பெயருடன் இந்நூல் வெளிவருவது கண்டு மனநிறைவு அடைகின்றோம். திரு. ஆர். எம் நாகலிங்கம் அவர்களின் சமய, சமூகப்பற்றையும் பன்முக ஆளுமைத்திறனையும் முன்னிலைப்படுத்தி முதற்கண் அவருக்கு நன்றி கூறக்கடமைப்பட்டுள்ளோம்.

காலத்தின் தேவைக்கு ஏற்ப சைவ நற்சிந்தனைக் கோட்பாடுகளையும் வழிபாட்டு முறைகளையும் வாழ்வியலுக்குப் பயனளிக்க வல்லமுறையில் மிகக் குறுகிய காலத்தில் இம்மலர் வெளிவருவதற்கு சமய, சமூகப் பற்றோடு பங்களித்த பெருத்தகையாளர்களான கலாநிதி மனோன்மணி, சண்முகதாஸ், கலாபூஷணம், சைவப்புலவர் எஸ். செல்லத்துரை, கலாபூஷணம், பண்டிதர் எஸ். அப்புத்துரை, சைவபூஷணம். இரா சாந்தகுமார், சைவப்புலவர். பண்டிதர் எஸ்.பி. சாந்தகுமார் ஆகியோருக்கு எங்களது பணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். அவர்களின் நற்பணிகள் மேலும் மேலும் சிறப்புற வேண்டிப் பிராத்திக்கின்றோம்.



இம்மலருக்கு அணிந்துரை வழங்கிய கல்வியமைச்சின் மேலதிகச் செயலாளர் உடுவை எஸ். தில்லைநடராசா, பிராத்தனை உரையை வழங்கிய உலகச் சைவப் பேரவையினது இலங்கைக் கிளையின் பொதுச் செயலாளர் கலாநிதி மு. கதிர்காமநாதன் ஜே. பி., கணினி வித்தக இளவல் இரா. ரஜனிகாந்த், பதிப்பகச் சிற்பி வி. இராசேந்திரம் ஆகியோருக்கும் எங்கள் பணிவான நன்றியைத் தெரிவிப்பதோடு அவர்களின் நற்பணிகள் மேலும் மேலும் ஏற்றமுறப் பிரார்த்தித்து வாழ்த்துகிறோம்.

இங்ஙனம்

**மனைவி : செ. தவமணி**

| பிள்ளைகள் | மருமக்கள் | பேரப்பிள்ளைகள், |
|---|---|---|
| புஸ்பநாதன் | சி. மல்லிகா | பவிஜா - சந்திரகாந்தன், மயூரன், சாமினி - நந்தகுார், வினோதா - தயாளன், ராஜ்மோகன். |
| புஸ்பவனிதா | தி. சின்னத்துரை | ரபீரா - செல்வக்குமார் சோபிதா - சத்தீஸ் வாகீஸ் |
| தேவமலர் | அ. மகேந்திரன் | - |
| புஸ்பானந்தன் | த. கிருஷ்ணசுகி | ஜசிராஜ், கமல்ராஜ் |
| புஸ்பாகரன் | அ. தெய்வேந்திரராணி | சஜீதா - ஜெகன் சஜீகாந், அனுஜன் |
| புஸ்பரூபன் | - | - |
| புஸ்பராதா | சி. சுதாஜினி | தினிஷா, ரோணிஷா |

கண்டி ரோட், அரியாலை,
யாழ்ப்பாணம்.
09 – 03 – 20085

# தோத்திரப்பாடல்களுக்கு அறிமுகம்

தோத்திரம் (ஸ்தோத்திரம், துதிவகை) என்பது எவரும் பொருளுணர்ந்தோ, உணராமலோ, இன்னிசையமையவோ, அமையாதோ தத்தமது ஆற்றலுக்கேற்ப இறைவனைப் பாடிப் பரவிப் பயன்பெற உதவும்: எளிதிலே சாதிக்கும் சாதனை வழியுமாம்.

நம் சமயகுரவரும் சைவசமய சார்புடைய அருளாளரும் அருளிய துதிப்பாடல்கள் பன்னிரு திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளன. நம்மாழ்வார் முதலியோர் அருளியவை திவ்விய பிரபந்தமென்று போற்றப்படுகின்றன.

பிற்காலங்களிலும் அருணகிரிநாதர், தாயுமானார், குமரகுருபரர் முதலிய இறையருள் பெற்றோர் இசைத்த பாடல்களும் பலவகைப் பிரபந்த நூல்களாய் அமைந்துள்ளன. இவையன்றிப் புராண இதிகாசங்களிலும் ஆங்காங்கு தோத்திரங்களுண்டு. இறைவனின் ஆயிரந் திருநாமாவளிகளும் பாராயணத்துக்காக அமைந்துள்ளன. அவை "நம நம" எனவும் "போற்றி போற்றி" எனவும் "வணக்கம்", "வாழி" எனவும் அந்தம் ஆதிகளில் அமைந்திருக்கக் காணலாம். வேறு சில அடைக் கலம், ஓலம், சரணம் என்ற வகையிலும் இணைந்திருக்கும்.

இவ்வகைத் தோத்திரங்களிலே எங்கள் குறைகளை முறையிடும் வகையும், நாம் இறைவனிடம் இரந்து வேண்டுவன எவையெனவும், வேண்டுமாறும் கூறப்படுதலையும் காணலாம். இவ்வழி பக்தி மார்க்கம் எனப்படும். ஏனைய வழிகளிலும் பார்க்க மிக எளிமையான வழி இது ஒன்றேயாகும். இவ்வழிக்குப் பூவோ, நீரோ, பச்சிலை, தூபதீப, நிவேதனமோ அவசியமில்லை. அமைந்தால் நன்றே.



நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் எத்தொழில் செய்து கொண்டும் தோத்திரம் சொல்லிக்கொண்டிருக்கலாம். காரியமும் நடக்கும். கடவுள் வழிபாடும் நடக்கும். கடவுள அருளாலே காரிய சித்தி கைகூடும். ஆக நாம் செய்ய வேண்டியது ஒன்றே: நமது இஷ்ட தெய்வத்துக்குரிய தோத்திரங்களிலே சிலவற்றை மனனம் செய்து படிப்பதை நாம் பழக்கமாகக் கொள்ள வேண்டும்.

**"நற்றவா உன்னை நான்மறக்கிலும் சொல்லும் நா நமசிவாயவே" என்றபடியே வாழ்ந்தால் காலமெல்லாம் கருமமாகும்: சீலம் வளரும்: திருவளரும்.**

## திருமுறைக்கு அறிமுகம்

சைவசமயத்தைத் தழைப்பிக்கத் தோன்றிய சமய குரவர்கள் அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர், திருமூலர், சேக்கிழார் மற்றும் பல சிவனடியார்களாவர். இப் பெரியோர்கள் அவ்வக் காலத்தே சிவபெருமான்மீது பாடியருளிய தெய்வத் திருப்பாடல்களே தேவாரம், திருவாசகம், திருமந்திரம், பெரிய புராணம் இன்னபிறவுமாம். இவை நம்பியாண்டார் நம்பி என்பவரால் தொகுக்கப்பட்டுப் பின்வருமாறு முறையே பன்னிரு திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளன.

முதல் 3 திருமுறைகள் திருஞானசம்பந்தர் தேவாரம். 4 முதல் 6ஆம் திருமுறை முடியத் திருநாவுக்கரசர் தேவாரம். 7ஆம் திருமுறை சுந்தரர் தேவாரம். மாணிக்கவாசகர் அருளிய திருவாசகம் திருக்கோவையர் 8ஆம் திருமுறையாகும். திருஇசைப்பா, திருப்பல்லாண்டு 9ஆம் திருமுறையாகவும், திருமூலர் அருளிய திருமந்திரம் 10ஆம் திருமுறையாகவும், திருவாலவாயுடையார் முதல் நம்பியாண்டார் நம்பி ஈறாகப் பன்னிருவர் பாடிய திருப்பாடல்கள் 11ஆம் திருமுறையாகவும், சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணம் 12ஆம் திருமுறையாகவும் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

உ
சிவமயம்

# முதலாந் திருமுறை

**திருஞானசம்பந்தர்** **தேவாரம்**

திருச்சிற்றம்பலம்

தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடி
காடுடையசுட லைப்பொடிபூசியென் னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 1

முற்றலாமையிள நாகமோடேன முளைக்கொம்பவைபூண்டு
வற்றலோடுகல னாப்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கற்றல்கேட்டலுடை யார்பெரியார்கழல் கையால்தொழுதேத்தப்
பெற்றமூர்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே 2

நீர்பரந்தநிமிர் புன்சடைமேலோர் நிலாவெண்மதிசூடி
ஏர்பரந்தவின வெள்வளைசோரஎன் னுள்ளங்கவர்கள்வன்
ஊர்பரந்தவுல கின்முதலாகிய ஓரூரிதுவென்னப்
பேர்பரந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 3

விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றி விளங்குதலையோட்டில்
உண்மகிழ்ந்துபலி தேரியவந்தென துள்ளங்கவர் கள்வன்
மண்மகிழ்ந்தஅர வம்மலர்க்கொன்றை மலிந்தவரைமார்பிற
பெண்மகிழ்ந்தபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 4

ஒருமைபெண்மையுடைய யன்சடையன்விடை யூரும்மிவுனென்ன
அருமையாகவுரை செய்யவமர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கருமைபெற்றகடல் கொள்ளமிதந்ததோர் காலம்மிதுவென்னப்
பெருமைபெற்றபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே. 5

திருச்சிற்றம்பலம்



உ
சிவமயம்

# இரண்டாந் திருமுறை

**திருநீற்றுப் பதிகம்** **திருஞானசம்பந்தர்** **தேவாரம்**

திருச்சிற்றம்பலம்

**மந்திர** மாவது நீறு வானவர் மேலது நீறு
**சுந்தர** மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
**தந்திர** மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
**செந்து**வர் வாயுமை பங்கன் திருஆல வாயான் திருநீறே. 1

**வேதத்தி** லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
**ஓதத்** தகுவது நீறு உண்மையி லுள்ளது நீறு
**சீதப்** புனல்வயல் சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே. 2

முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு
சித்தி தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 3

காண இனியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி யணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 4

பூச இனியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச இனியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு அந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருஆல வாயான் திருநீறே. 5

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்

# இரண்டாந் திருமுறை

**கோளறு திருப்பதிகம்   திருஞானசம்பந்தர்   தேவாரம்**

திருச்சிற்றம்பலம்

வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள்கங்கை முடிமே லணிந்தெ
னுளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செல்வாய் புதன்வியாழன் வெள்ளி
சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 1

நஞ்சணி கண்டனெந்தை மடவாள்த னோடும்
விடையேறு நங்கள் பரமன்
துஞ்சிருள் வன்னிகொன்றை முடிமே லணிந்தெ
னுளமே புகுந்த அதனால்
வெஞ்சின அவுணரோடு முருமிடியுமின்னு
மிகையான பூத மவையும்
அஞ்சிடும் நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே. 2

என்பொடு கொம்பொடாமை யிவைமார் பிலங்க
எருதேறி யேழை யுடனே
பொன்பொதி மத்தமாலை புனல்சூடி வந்தெ
னுளமே புகுந்த அதனால்
ஒன்பதொ டொன்றொடேழு பதனெட் டொடாறு
முடனாய நாள்க ளவைதாம்
அன்பொடு நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே 3

திருச்சிற்றம்பலம்



உ
சிவமயம்

# மூன்றாந் திருமுறை

**நமச்சிவாயத் திருப்பதிகம்   திருஞானசம்பந்தர்   தேவாரம்**

திருச்சிற்றம்பலம்

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்பொரு ளாவது
நாதன் நாம நமச்சி வாயவே. 1

கொல்வா ரேனுங் குணம்பல நன்மைகள்
இல்லா ரேனு மியம்புவ ராயிடின்
எல்லாத் தீங்கையு நீங்குவ ரென்பரால்
நல்லார் நாம நமச்சி வாயவே. 2

மந்த ரம்மன பாவங்கள் மேவிய
பந்த னையவர் தாமும் பகர்வரேல்
சிந்தும் வல்வினை செல்வமு மல்குமால்
நந்தி நாம நமச்சி வாயவே. 3

போதன் போதன கண்ணனு மண்ணல்தன்
பாதந் தான்முடி நேடிய பண்பராய்
யாதுங் காண்பரி தாகி யலந்தவர்
ஓது நாம நமச்சி வாயவே. 4

நந்தி நாம நமச்சிவா யவெனும்
சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யால்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்த பாச மறுக்கவல் லார்களே. 5

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்

# நான்காந் திருமுறை

**நமச்சிவாயத் திருப்பதிகம் திருநாவுக்கரசர் தேவாரம்**

திருச்சிற்றம்பலம்

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே. 1

பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கலம் அரன்அஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலங் கோட்ட மில்லது
நாவினுக் கருங்கலம் நமச்சி வாயவே. 2

சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கலால்
நலமிலன் நாடொறு நல்கு வான்நலன்
குலமில ராகிலுங் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே. 3

இல்லக விளக்கது இருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே. 4

முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறி யேசர ணாதல் திண்ணமே
அந்நெறி யேசென்றங் கடைந்த வர்க்கெலாம்
நன்னெறி யாவது நமச்சி வாயவே. 5

திருச்சிற்றம்பலம்



உ
சிவமயம்

# ஐந்தாந் திருமுறை

**திருநாவுக்கரசர் தேவாரம்**

திருச்சிற்றம்பலம்

அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்
பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை
என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோவிப் பிறவியே. 1

அல்ல லென்செயும் அருவினை யென்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தா னென்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்
கெல்லை யில்லதோ ரடிமைபூண் டேனுக்கே. 2

சிட்டர் வானவர் சென்று வரங்கொளும்
சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலத்துறை
சிட்டன் சேவடி கைதொழச் செல்லுமச்
சிட்டர் பாலணு கான்செறு காலனே. 3

நாடி நாரணன் நான்முக னென்றிவர்
தேடி யுந்திரிந் துங்காண வல்லரோ
மாட மாளிகை சூழ்தில்லை யம்பலத்
தாடி பாதமென் நெஞ்சு ளிருக்கவே. 4

மதுர வாய்மொழி மங்கையோர் பங்கினன்
சதுரன் சிற்றம் பலவன் திருமலை
அதிர ஆர்த்தெடுத் தான்முடி பத்திற
மிதிகொள் சேவடி சென்றடைந் துய்ம்மினே. 5

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்

# ஆறாந் திருமுறை

**திருநாவுக்கரசர்** **தேவாரம்**

திருச்சிற்றம்பலம்

அப்பன்நீ அம்மைநீ ஐய னும்நீ
அன்புடைய மாமனும் மாமி யும்நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொரு ளும்நீ
ஒருகுலமுஞ் சுற்றமும் ஓரூ ரும்நீ
துய்ப்பனவும் உய்ப்பனவுந் தோற்று வாய்நீ
துணையாயென் நெஞ்சந் துறப்பிப் பாய்நீ
இப்பொன்னீ இம்மணிநீ இம்முத் தும்நீ
யிறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே. 1

திருநாமம் அஞ்செழுத்துஞ் செப்பா ராகில்
தீவண்ணர் திறமொருகால் பேசா ராகில்
ஒருகாலுந் திருக்கோயில் சூழா ராகில்
உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணா ராகில்
அருநோய்கள் கெடவெண்ணீ றணியா ராகில்
அளியற்றார் பிறந்தவா றேதோ வென்னிற்
பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ் செத்துப்
பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின் றாரே. 2

குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன்
குற்றமே பெரிதுடையேன் கோல மாய
நலம்பொல்லேன் நான்பொல்லேன் ஞானி யல்லேன்
நல்லாரோ டிசைந்திலேன் நடுவே நின்ற
விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தேன் அல்லேன்
வெறுப்பனவும் மிகப்பெரிதும் பேச வல்லேன்
இலம்பொல்லேன் இரப்பதே ஈய மாட்டேன்
என்செய்வான் தோன்றினேன் ஏழை யேனே. 3

திருச்சிற்றம்பலம்



உ
சிவமயம்

# ஏழாந் திருமுறை

**நமச்சிவாயத் திருப்பதிகம்** **சுந்தரர்** **தேவாரம்**

திருச்சிற்றம்பலம்

மற்றுப்பற்றெனக் கின்றிநின்திருப் பாதமேமனம் பாவித்தேன்
பெற்றலும்பிறந் தேன்இனிப்பிற வாததன்மைவந் தெய்தினேன்
கற்றவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை யூரிற்பாண்டிக் கொடுமுடி
நற்றவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. 1

எல்லையில்புகழ் எம்பிரானெந்தை தம்பிரானென்பொன் மாமணி
கல்லைஉந்தி வளம்பொழிந்திழி காவிரியதன் வாய்க்கரை
நல்லவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை யூரிற்பாண்டிக் கொடுமுடி
வல்லவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. 2

அஞ்சினார்க்கரண் ஆதியென்றடி யேனும்நான்மிக அஞ்சினேன்
அஞ்சலென்றடித் தொண்டனேற்கருள் நல்கினாய்க்கழி கின்றதென்
பஞ்சின்மெல்லடிப் பாவைமார்குடைந் தாடுபாண்டிக் கொடுமுடி
நஞ்சணிகண்ட நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. 3

விரும்பிநின்மலர்ப் பாதமேநினைந் தேன்வினைகளும் விண்டன
நெருங்கிவண்பொழில் சூழ்ந்தெழில்பெற நின்றகாவிரிக் கோட்டிடைக்
குரும்பை மென்முலைக் கோதைமார்குடைந் தாடுபாண்டிக் கொடுமுடி
விரும்பனேயுனை நான்மறக்கினுஞ் சொல்லும்நா நமச்சிவாயவே. 4

கோணியபிறை சூடியைக்கறை யூரிற்பாண்டிக் கொடுமுடி,
பேணியபெரு மானைப்பிஞ்ஞகப் பித்தனைப்பிறப் பில்லியைப்
பாணுலாவரி வண்டறைகொன்றைத் தாரனைப்படப் பாம்பரை
நாணனைத்தொண்ட னூரன்சொல்லிவை சொல்லுவார்க்கில்லை துன்பமே. 5

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்

# ஏழாந் திருமுறை

**சுந்தரர்** **திருத்தொண்டர்தொகை** **தேவாரம்**

திருச்சிற்றம்பலம்

தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே. 1

கடல்சூழ்ந்த உலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி இடங்கழிக்கும் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைத னடியார்க்கு மடியேன்
புடைசூழ்ந்த புலியதள்மேல் அரவாட ஆடிப்
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த் துணைக்குமடியேன்
அடல்சூழ்ந்த வேல்நம்பி கோட்புலிக்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. 2

பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்
பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியேன்
அப்பாலும் அடிச்சார்ந்தார் அடியார்க்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. 3

திருச்சிற்றம்பலம்



உ
சிவமயம்

# எட்டாந் திருமுறை

**மாணிக்கவாசக சுவாமிகள்** **திருவாசகம்**

திருச்சிற்றம்பலம்

பால்நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெருமானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவதினியே. 1
பிடித்தபத்து

கால முண்டாகவே காதல்செய்
துய்மின் கருதரிய
ஞாலமுன் டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுன் டானெங்கள் பாண்டிப்
பிரான்தன் னடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின்
றான்வந்து முந்துமினே. 2
திருப்பாற்சுண்ணப்பதிகம்

அன்றே யென்றன் ஆவியும்
உடலும் உடமை யெல்லாமும்
குன்றே யனையாய் என்னையாட்
கொண்டபோதே கொண் டிலையோ
இன்றோ ரிடையூ றெனக்குண்டோ
எண்டோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானோ இதற்கு நாயகமே. 3
குழைத்தபத்து

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்

# ஒன்பதாந் திருமுறை

## திருப்பல்லாண்டு

திருச்சிற்றம்பலம்

தாதையைத் தாளற வீசிய
சண்டிக்(கு)இவ் அண்டத்தொடும் உடனே
பூதலத் தோரும் வணங்கப்பொற்
கோயிலும் போனகமும் அருளிச்
சோதி மணிமுடித் தாமமும்
நாமமும் தொண்டர்க்கு நாயகமும்
பாதகத் துக்குப் பரிசுவைத்
தானுக்கே பல்லாண்டு கூறுதுமே. 1

குழலொலி யாழொலி கூத்தொலி
ஏத்தொலி எங்கும் குழாம்பெருகி
விழவொலி விண்ணளவும் சென்று
விம்மி மிகுதிரு ஆரூரின்
மழவிடை யாற்கு வழிவழி
யாளாய் மணஞ்செய் குடிப்பிறந்த
பழஅடி யாரொடுங் கூடி
எம்மானக்கே பல்லாண்டு கூறுதுமே. 2

ஆரார் வந்தார்? அமரர்
குழாத்தில் அணியுடை ஆதிரைநாள்
நாரா யணனொடு நான்முகன்
அங்கி இரவியும் இந்திரனும்
தேரார் வீதியில் தேவர்
குழாங்கள் திசையனைத்தும் நிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியும்
ஆடியும் பல்லாண்டு கூறுதுமே. 3

திருச்சிற்றம்பலம்



உ
சிவமயம்

# ஒன்பதாந் திருமுறை

## திருவிசைப்பா

திருச்சிற்றம்பலம்

இடர்கெடுத்(து) என்னை ஆண்டுகொண்(டு) என்னுள்
இருட்பிழம்(பு) அறஎறிந்(து) எழுந்த
சுடர்மணி விளக்கின் உள்ளொளி விளங்கும்
தூயநற் சோதியுள் சோதீ!
அடல்விடைப் பாகா! அம்பலக் கூத்தா!
அயனொடு மாலறி யாமைப்
படரொளிப் பரப்பிப் பரந்துநின் றாயைத்
தொண்டனேன் பணியுமா பணியே 1

ஏகநா யகனை இமையவர்க்(கு) அரசை
என்னுயிர்க்(கு) அமுதினை எதிரில்
போகநா யகனைப் புயல்வணற்(கு) அருளிப்
பொன்னெடுஞ் சிவிகையா வூர்ந்த
மேகநா யகனை மிகுதிரு வீழி
மிழலைவிண் ணிழிசெழுங் கோயில்
யோகநா யகனை அன்றிமற் றொன்றும்
உண்டென உணர்கிலேன் யானே 2

பாலும் அமுதமும் தேனுமாய்
ஆனந்தம் தந்துள்ளே பாலிப்பான்
போலும்என் ஆருயிர்ப் போகமாம்
புரகால காமபு ராந்தகன்
சேலும் கயலும் திளைக்குநீர்த்
திருவா வடுதுறை வேந்தனோ(டு)
ஆலும் அதற்கே முதலுமாம்
அறிந்தோம் அரிவைபொய் யாயதே. 3

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்

# பத்தாந் திருமுறை

**திருமூலர்** **திருமந்திரம்**

திருச்சிற்றம்பலம்

சிவனொடுஒக் கும்தெய்வம் தேடினும் இல்லை
அவனொடுஒப் பார்இங்கு யாவரும் இல்லை
புவனம் கடந்தன்று பொன்னொளி மின்னும்
தவனச் சடைமுடித் தாமரை யானே. 1

ஆரறி வார்எங்கள் அண்ணல் பெருமையை
யாரறி வார்இந்த அகலமும் நீளமும்
பேரறி யாத பெருஞ்சுடர் ஒன்றதின்
வேரறி யாமை விளம்புகின் றேனே. 2

மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்
ஞாலம் அறியவே நந்தி அருளது
காலை எழுந்து கருத்தறிந்து ஓதிடின்
ஞாலத் தலைவனை நண்ணுவர் அன்றே. 3

சிவன்முதல் மூவரோடு ஐவர் சிறந்த
அவைமுதல் ஆறிரண்டு ஒன்றோடுஒன்று ஆகும்
அவைமுதல் விந்துவும் நாதமும் ஓங்கச்
சவைமுதல் சங்கரன் தன்பெயர் தானே. 4

ஊரெலாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே. 5

திருச்சிற்றம்பலம்



உ
சிவமயம்

# பதினோராந் திருமுறை

**நக்கீரதேவ நாயனார்** **திருஈங்கோய்மலை எழுபது**

திருச்சிற்றம்பலம்

அடியும் முடியும் அரியும் அயனும்
படியும் விசும்பும் பாய்ந்(து) ஏறி - நொடியுங்கால்
இன்ன(து) என அறியா ஈங்கோயே - ஓங்காரம்
அன்னதென நின்றான் மலை.

அந்தஇள மாக்குழவி ஆயம் பிரிந்ததற்குக்
கொந்தவிழ்தேன் தோய்த்துக் குறமகளிர் - சந்தின்
இலைவளைக்கை யாற்கொடுக்கும் ஈங்கோயே மேரு
மலைவளைக்கை வில்லி மலை. 2

அம்பவள வாய் மகளிர் அம்மனைக்குத் தம்மனையைச்
செம்பவளம் தாஎன்னச் சீர்க்குறத்தி - கொம்பின்
இறுதலையி னாற்கிளைக்கும் ஈங்கோயே நம்மேல்
மறுதலைநோய் தீர்ப்பான் மலை. 3

அரிகரியைக் கண்டவிடத்(து) அச்சலிப்பாய் ஓடப்
பிரிவரிய தன்பிடியைப் பேணிக் - கரிபெரிதும்
கையெடுத்து நீட்டிக் கதஞ்சிறக்கும் ஈங்கோயே
மையடுத்த கண்டன் மலை. 4

அரியும் உழுவையும் ஆளியுமே ஈண்டிப்
பரியிட்டுப் பன்மலர்கொண்(டு) ஏறிச் - சொரிய
எரியாடி கண்டுகக்கும் ஈங்கோயே கூற்றம்
திரியாமல் செற்றான் சிலம்பு. 5

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்

# பன்னிரண்டாந் திருமுறை

**சேக்கிழார்** **பெரிய புராணம்**

திருச்சிற்றம்பலம்

மாற்றுநீ வன்மை பேசி
வன்தொண்டன் என்னும் நாமம்
பெற்றனை நமக்கும் அன்பின்
பெருகிய சிறப்பின் மிக்க
அர்ச்சனை பாட்டே ஆகும்
ஆதலால் மண்மேல் நம்மைச்
சொல் தமிழ் பாடுக என்றார்
தூ மறை பாடும் வாயார்

வேதியன் ஆகி என்னை
வழக்கினால் வெல்ல வந்த
ஊதியம் அறியாதேனுக்கு
உணர்வு தந்து உய்யக் கொண்ட
கோதுஇலா அமுதே இன்றுஉன்
குணப் பெருங்கடலை நாயேன்
யாதினை அறிந்துஎன் சொல்லிப்
பாடுகேன் என மொழிந்தார்

ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள
அளப்பு அரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக் குணம்ஒரு மூன்றும்
திருந்து சாத்துவிகமே ஆக
இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த
எல்லைஇல் தனிப்பெரும் கூத்தின்
வந்த பேர்இன்ப வெள்ளந்துள் திளைத்து
மாறுஇலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்.

திருச்சிற்றம்பலம்



# திருப்புகழ்

**அருணகிரிநாதர்**

ஏறுமயில் ஏறிவிளை யாடுமுகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே
கூறும் அடியார்கள் வினை தீர்க்குமுகம் ஒன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரரை வதைத்தமுகம் ஒன்றே
வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே
ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்
ஆதி அருணாசலம் அமர்ந்த பெருமாளே.

கைத்தல நிறைகனி அப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணிக்
கற்றிடும் அடியவர் புத்தியி னுறைபவர்
கற்பக மெனவினை கடிதேகும்
மத்தமும் மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே
முத்தமிழ் அடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா
அத்துயர ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை இபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே

# வாழ்த்து

**கச்சியப்பர்**

வான்முகில் வழாது பெய்க மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை யரசுசெய்யக் குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை யறங்க ளோங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மை கொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்

# அருள் வாழ்த்தொலிகள்

* நம பார்வதிபதயே - அரகரமகாதேவா
* தென்னாடுடைய சிவனே போற்றி
  எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி
* சிறீசிற்சபேசா - சிவசிதம்பரம்
* அண்ணாமலை எம் அண்ணா போற்றி
  கண்ணாரமுதக் கடலே போற்றி
* ஏகம்பத்துறை எந் தாய் போற்றி
  பாகம் பெண்ணுரு ஆனாய் போற்றி
* இன்பமே சூழ்க - எல்லோரும் வாழ்க

திருச்சிற்றம்பலம்



உ
சிவமயம்

# பஞ்ச புராணம் ஓதுதல்

**பஞ்ச புராணம் ஓதும் முறை**

தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருப்புராணம் எனும் ஐந்தும் பஞ்சபுராணம் எனப்படும். பஞ்சபுராணம் எனும் தொடர் பழையகாலந்தொட்டு வழங்கி வருகின்றது. பஞ்ச என்றால் ஐந்து என்றும் புராணம் என்றால் புராதனபாடல்கள் என்றும் பொருள்படும். எனவே இது ஒரு தொடராகவே கொள்ளப்படுகின்றது.

சைவசமயத்தவர்களின் தோத்திர நூல்களாக உள்ளவை பன்னிரு திருமுறைகள். அவைமுழுவதையும் ஒரேநேரத்தில் ஓதுதல் நடைமுறைச் சாத்தியமில்லை. அதனால் அத்திருமுறை களிலிருந்து அருளாளர்களால் தொகுத்துத் தரப்பட்டவையே பஞ்ச புராணங்கள்.

தேவாரத்திருமுறைகளாகிய ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகியோரின் முதல் ஏழு திருமுறைகளிலிருந்து ஒரு தேவாரப் பாடலும், எட்டாம் திருமுறையாகிய திருவாசகத்தி லிருந்து ஒரு பாடலும், ஒன்பதாம் திருமுறையிலிருந்து ஒரு திருவிசைப்பாப் பாடலும், ஒரு திருப்பால்லாண்டுப் பாடலும், பன்னிரண்டாம் திருமுறையாகிய பெரியபுராணத்திலிருந்து ஒரு புராணமும் ஆக ஐந்துபாடல்கள் தெரிந்தெடுத்து ஓதவேண்டும்.

பஞ்சபுராணம் பாடத் தொடங்கும் போதும் முடிக்கும் போதும் திருச்சிற்றம்பலம் என்று சொல்ல வேண்டும். இதற்குக் காரணம் திருச்சிற்றம்பலம் என்பது சிதம்பரத்தைக்குறிக்கும். திருமுறைகள் சிதம்பரத்தில் உள்ள ஓர் அறையில் இருந்து எடுக்கப்பட்டபடியால் அவற்றை ஓதும்போது நடராசப்பெருமானின் திருவருளை நன்றியுடன் நினைந்து திருச்சிற்றம்பலம் என்று சொல்லிப் பாடுதல் மரபு.

பிற்காலத்தில் இந்த ஐந்து பாடல்களுடன் முருகப்பெருமானைப் பற்றித் திருப்புகழ்பாடும் வழக்கமும் ஏற்பட்டது. இக்காலத்தில் திருப்புகழைத் தொடர்ந்தும் "வான்முகில் வழாது பெய்க......." எனும் கந்தபுராண வாழ்த்துப் பாடலும் பாடப்படுகின்றது.

ஓதுவார் அல்லது சைவாசாரமுள்ள ஒருவர் இந்த அருட்பாடல்களுக்குரிய பண்முறையில் பாடுவார். பாடிமுடிந்ததும் பக்திசிரத்தையுடன் கேட்டுக்கொண்டிருக்கும் எல்லா அன்பர்களும் பங்கு பற்றும் வகையில் "அருள்வாக்குகளின்" முற்பாதியை ஓதுவார் சொல்லப் பிற்பாதியை எல்லோரும் சேர்ந்து சொல்லுவார்கள். நமபார்வதிபதயே - அரகரமகாதேவா என்பதைச் சில இடங்களில் முதலில் சொல்வதும், உண்டு. அத்துடன் மூன்று முறை சொல்லுவதுமுண்டு.



# பஞ்சபுராணம்

திருச்சிற்றம்பலம்

## தேவாரம்

வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள்கங்கை முடிமே லணிந்தெ
னுளமே புகுந்த வதனால்
ஞாயிறு திங்கள்செவ்வாய் புதன்வியாழன் வெள்ளி
சனிபாம் பிரண்டு முடனே
யாசறு நல்லநல்ல வவைநல்ல நல்ல
வடியார வர்க்கு மிகவே.

## திருவாசகம்

குறைவிலா நிறைவே கோதிலா அமுதே
ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
மனத்திடை மன்னிய மன்னே
சிறைபெறா நீர்போல் சிந்தைவாய்ப் பாயும்
திருப்பெருந் துறையுறை சிவனே
இறைவனே நீஎன் உடலிடங் கொண்டாய்
இனியுன்னை என்னிரக் கேனே

## திருவிசைப்பா

எம்பந்த வல்வினைநோய் தீர்த்திட் டெமையாளுஞ்
சம்பந்தன் காழியர்கோன் றன்னையுமாட் கொண்டருளி
அம்புந்து கண்ணாளுந் தானு மணிதில்லைச்
செம்பொன்செ யம்பலமே சேர்ந்திருக்கை யாயிற்றே.

## திருப்பல்லாண்டு

குழலொலி யாழொலி கூத்தொலி யேத்தொலி
எங்குங் குழாம்பெருகி
விழவொலி விண்ணளவுஞ் சென்று விம்மி
மிகுதிரு வாரூரின்
மழவிடை யார்க்கு வழிவழி யாளாய்
மணஞ்செய் குடிப்பிறந்த
பழவடி யாரொடுங் கூடியெம் மானுக்கே
பல்லாண்டு கூறுதுமே.

## பெரிய புராணம்

என்று மின்பம் பெருகு மியல்பினால்
ஒன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கு நிலவி யுலகெலாம்.

## திருப்புகழ்

வேதியன் ஆகி என்னை
வழக்கினால் வெல்ல வந்த
ஊதியம் அறியாதோனுக்கு
உணர்வு தந்து உய்யக் கொண்ட
கோதுஇலா அமுதே இன்றுஉன்
குணப் பெருங்கடலை நாயேன்
யாதினை அறிந்துஎன் சொல்லிப்
பாடுகேன் என மொழிந்தார்.

## வாழ்த்து

வான்முகில் வழாது பெய்க மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை யரசுசெய்கக் குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை யறங்க ளோங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மை கொள் சைவநீதி விளங்குக வுலகமெல்லாம்

திருச்சிற்றம்பலம்



# தமிழில் அருச்சனை

நம் தாய்மொழி தமிழ். தமிழில் வழிபாடு செய்வது நம்மைப் பொறுத்தவரையில் எவ்வகையில் தவறாகும். தமிழ் பேசும் பிற சமயத்தவர்கள் தங்கள் வழிபாடுகளையும் சடங்குகளையும் தமிழில் செய்கிறார்கள். தமிழ் அறிந்த இந்துக்கள் தமிழில் செய்தால் என்ன?

அருச்சனை என்பது வழிபாட்டின் ஒரு கூறு ஆகும். இறைவனின் திருப்பெயர்களை 108 முறை அல்லது 1008 முறை கூறிப் போற்றி இறைவன் திருவடியில் மலர் இட்டு வழிபடுவது தான் அருச்சனை. இந்தத் திருப்பெயர்களை நமக்குப் புரியும் வண்ணம் தமிழில் சொல்வது நம் நெஞ்சத்தை நெகிழ்விக்க உதவும். இவ்வாறு தமிழில் "போற்றி" கூறுவது நீண்ட நெடுங்காலமாகத் தமிழர் களிடையே இருந்து வரும் இயல்பு என்பது திருநாவுக்கரசர் தேவார அடிகளால் அறியமுடியும். "பூக்கை பயன் என்ன?" என்று கேட்கிறார் நாவுக்கரசர். நிலைபெறுமாறு எண்ணுதியேல், நெஞ்சே நீ இங்கே வா, நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்கு அலகிட்டு மெழுகிட்டுத் தலையாரக் கும்பிட்டுச் சங்கரா சய சய போற்றி என்று அலராகில்லா என்று அவர் நமக்கு அறிவுறுத்துகிறார்.

மேலும் தமிழர்கள் ஒவ்வொருவரும் சிவபெருமானுக்குத் தமிழில் போற்றி சொல்லி அருச்சனை செய்ய உதவும் வகையில் திருநாவுக்கரசர் போற்றித் திருத்தாண்டகம் ஐந்து பதிகங்கள் தம் தேவாரத்தில் பாடிக் கொடுத்திருக்கிறார். மணிவாசகர் பெருமான் தம் திருவாசகத்தில் "போற்றித் திரு அகவல்" என்ற பகுதியைப் பாடியுள்ளார்.

மற்ற பகுதிகளிலும் இறைவன் திருவடியையும் திருப்பெயருராகிய நமச்சிவாய மந்திரத்தினையும் போற்றிப் பாடி இருக்கிறார். சுந்தரரைத் தடுத்தாட் கொண்ட போது வடமொழியில் வேதத்தை அருளிய சிவபெருமான் அவரிடம் "அருச்சனை பாட்டே ஆகும் சொற்றமிழ் பாடுக" என்று சொன்னதாகச் சேக்கிழார் கூறுகிறர். எனவே தமிழில் அர்ச்சனை செய்வது தமிழர்க்கு உகந்ததே.

தமிழில் அனைவரும் அருச்சனை செய்வதற்குரிய வகையில் "போற்றி" அருச்சனைப் புத்தகங்கள் வெளியாகி யுள்ளன. இவற்றுள் விநாயகர், முருகன், சிவபெருமான், அம்மை ஆகியோர்க்குரிய தமிழ் அருச்சனைகள் உள்ளன. அவற்றைப் படித்து வீட்டிலும் கோயிலிலும் வழிபாடு செய்யும் போது அருச்சனை செய்ய வேண்டும். இதனால் தமிழர்கள் தங்கள் வழிபாட்டில் மனத்தை ஈடுபடுத்த முடியும். அதே நேரத்தில் தமிழ் மொழியையும் ஒருவகையில் வாழ வைக்க முடியும்.

அருச்சனை செய்யும் போது வழிபடும் பக்தர் தங்கள் உள்ளத்திற்குள் அமைதியாகப் போற்றி அருச்சனையைத் தமிழில் சொல்லி வழிபடலாம்.



# அருள்மிகு விநாயகர் போற்றி

**திருச்சிற்றம்பலம்**

**இவ்வருச்சனை சேர்ந்த துதியை**
**ஐயனே ஏற்று அருள்க! அருள்கவே!!**

1. ஓம் அகரமென நிற்பாய் போற்றி
2. ஓம் அங்குசக் கரத்தாய் போற்றி
3. ஓம் அடியார்க் கெளியாய் போற்றி
4. ஓம் அமரர்கள் நாதா போற்றி
5. ஓம் அறக் கருணையாய் போற்றி
6. ஓம் அறிவானந்த உருவே போற்றி
7. ஓம் அறுகு சூடிய அமலா போற்றி
8. ஓம் ஆதார கணபதி போற்றி
9. ஓம் ஆரண முதலே போற்றி
10. ஓம் ஆனை முகத்தனே போற்றி
11. ஓம் இடர்தனைக் களைவாய் போற்றி
12. ஓம் இடும்பை கெடுப்பாய் போற்றி
13. ஓம் இடையூறு நீக்குவாய் போற்றி
14. ஓம் இமயச் செல்வியின் சேயே போற்றி
15. ஓம் இளம்பிறை போலும் எயிற்றினாய் போற்றி
16. ஓம் ஈசானார் மகனே போற்றி
17. ஓம் மோதகக் கையினாய் போற்றி
18. ஓம் யாவு மானாய் போற்றி
19. ஓம் யோகியர் தலைவா போற்றி
20. ஓம் வல்லமை வல்லவா போற்றி
21. ஓம் விகடசக்கர விநாயகா போற்றி
22. ஓம் விண்மழை தருவாய் போற்றி
23. ஓம் வெற்றித் திருவே போற்றி
24. ஓம் வைத்த மாநிதியே போற்றி போற்றி

**திருச்சிற்றம்பலம்**

# அருள்மிகு சிவபெருமான் போற்றி

திருச்சிற்றம்பலம்

**இவ்வருச்சனை சேர்ந்த துதியை**
**ஐயனே ஏற்று அருள்க! அருள்கவே!!**

1. ஓம் அடியார் பெருமை அறிவாய் போற்றி (நா)
2. ஓம் அடியவர்க் காரமுது ஆனாய் போற்றி (நா)
3. ஓம் அண்டத்துக்கு அப்பாலாய் நின்றாய் போற்றி (நா)
4. ஓம் அதிபதியே ஆர்ஆமுதே ஆதீ போற்றி (நா)
5. ஓம் அந்தியாய் நின்ற அரனே போற்றி (நா)
6. ஓம் அமரர் பதியாள வைத்தாய் போற்றி (நா)
7. ஓம் அருமையில் எளிய அழகே போற்றி (மா)
8. ஓம் அருந்தவர்கள் தொழுதுஏத்தும் அப்பா போற்றி (நா)
9. ஓம் அனல் அங்கை ஏந்திய ஆநீ போற்றி (நா)
10. ஓம் ஆசை தீரக் கொடுப்பாய் போற்றி (ச)
11. ஓம் ஆலமர நிழலில் அமர்ந்தாய் போற்றி (நா)
12. ஓம் ஆலாலம் உகந்துண்ட ஆதீ போற்றி (நா)
13. ஓம் ஆலைக் கரும்பின் தெளிவே போற்றி (நா)
14. ஓம் இடர்கடி கணபதிவர அருளினை போற்றி (ச)
15. ஓம் இரவிடை ஒள்ளரி ஆடினாய் போற்றி (ச)
16. ஓம் ஈண்டுஒளி சேர்கங்கைச் சடையாய் போற்றி (நா)
17. ஓம் மூவுலகும் தான்ஆய முதல்வா போற்றி (நா)
18. ஓம் மெய்சேரப் பால்வெண்நீறு ஆடீ போற்றி (நா)
19. ஓம் மேலோர்க்கும் மேலாய் போற்றி (நா)
20. ஓம் வண்ணம் ஆயிரம் உடையாய் போற்றி (ச)
21. ஓம் வானோர்க்கு அருளிய மருந்தே போற்றி (மா)
22. ஓம் வானோர் வணங்கப் படுவாய் போற்றி (நா)
23. ஓம் வெள்ளிக் குன்றன்ன விடையாய் போற்றி (நா)
24. ஓம் வேத விழும்பொருளே போற்றி போற்றி (மா)

திருச்சிற்றம்பலம்



# அருள்மிகு உமையம்மை போற்றி

திருச்சிற்றம்பலம்

**இவ்வருச்சனை சேர்ந்த துதியை**
**அம்மையே ஏற்று அருள்க! அருள்கவே!!**

1. திருநிலை நாயகி தேவி போற்றி
2. கருத்தார்க் குழலுமை கௌரி போற்றி
3. மங்கள நாயகி மாமணி போற்றி
4. எங்கும் நிறைந்த இன்பொருள் போற்றி
5. இளமை நாயகி எந்தாய் போற்றி
6. வளமை நல்கும் வல்லியே போற்றி
7. யாழைப் போல்மொழி யாயே போற்றி
8. பேழை வயிற்றனைப் பெற்றோய் போற்றி
9. பால்வளை நாயகி பார்ப்பதி போற்றி
10. சூல்கொண் டுலகெலாம் தோற்றினாய் போற்றி
11. அறம்வளர் நாயகி அம்மே போற்றி
12. மறங்கடி கடைக்கண் மனோன்மணி போற்றி
13. போகம் ஆர்த்த பொற்கொடி போற்றி
14. பாகம் பிரியாப் பராபரை போற்றி
15. உலகுயிர் வளர்க்கும் ஒருத்தி போற்றி
16. மலர்தல் குவிதலில் மணமலர் போற்றி
17. பலநல் லனநீ படைத்தருள் போற்றி
18. உயிர்களின் பசிப்பிணி ஒழித்தருள் போற்றி
19. பயிர்கள் பயன்தரப் பரிந்தருள் போற்றி
20. செல்வம் கல்விச் சிறப்பருள் போற்றி
21. நல்லன் பொழுக்கம் நல்குவாய் போற்றி
22. போற்றிஉன் பொன்னடிப் போது போற்றி
23. போற்று புகழ்நிறை திருத்தாள் போற்றி
24. கற்பக வல்லி யுன் கழலிணை போற்றி

திருச்சிற்றம்பலம்

# அருள்மிகு முருகப்பெருமான் போற்றி

திருச்சிற்றம்பலம்

**இவ்வருச்சனை சேர்ந்த துதியை**
**ஐயனே ஏற்று அருள்க! அருள்கவே!!**

1. அருவாம் உருவாம் முருகா போற்றி
2. திருவார் மறையின் செம்பொருள் போற்றி
3. ஆறு முகத்தெம் அரசே போற்றி
4. மாறுகொள் சூரரை வதைத்தாய் போற்றி
5. இருள்கெடுத் தின்பருள் எந்தாய் போற்றி
6. உருள்பூங் கடம்பணி உரவோய் போற்றி
7. ஈசற் கினிய சேயே போற்றி
8. மாசறு திருவடி மலரோய் போற்றி
9. உறுநர்த் தாங்கும் உறவோய் போற்றி
10. செறுநர்த் தேய்த்த செவ்வேள் போற்றி
11. ஊனில் ஆவியாய் உயிர்ப்போய் போற்றி
12. கானில் வள்ளியின் கணவ போற்றி
13. எழில்கொள் இன்ப வாரிதி போற்றி
14. அழிவிலாக் கந்தனாம் அண்ணல் போற்றி
15. ஏறு மயிலூர்ந் தேகுவாய் போற்றி
16. கூறுமன் பர்க்குக் குழைவாய் போற்றி
17. தாரகற் கொன்ற தாழ்விலாய் போற்றி
18. பாரகம் அடங்கலும் பரவுவோய் போற்றி
19. தமிழ்மொழி இன்பில் தழைப்பாய் போற்றி
20. அமிழ்திற் குழைத்த அழகா போற்றி
21. கல்வியும் செல்வமும் கனிந்தருள் போற்றி
22. பல்வகை வளனும் பணித்தருள் போற்றி
23. இன்பார் இனைய ஏந்தால் போற்றி
24. சிங்கார வேலனே உன் சீரடி போற்றி

திருச்சிற்றம்பலம்



# அருள்மிகு ஸ்ரீவைரவர் நாமாவளி

திருச்சிற்றம்பலம்

**இவ்வருச்சனை சேர்ந்த துதியை**
**ஐயனே ஏற்று அருள்க! அருள்கவே!!**

| | | | |
|---|---|---|---|
| 1. | ஓம் | பைரவாய | நம |
| 2. | ஓம் | பூத நாதாய | நம |
| 3. | ஓம் | பூதாத்மனே | நம |
| 4. | ஓம் | பூதபாவநாய | நம |
| 5. | ஓம் | ஷேத்ரதாய | நம |
| 6. | ஓம் | ஷேத்ரபாலாய | நம |
| 7. | ஓம் | ஷேத்ரக்ஞாய | நம |
| 8. | ஓம் | ஷத்ரியாய | நம |
| 9. | ஓம் | விராஜே | நம |
| 10. | ஓம் | ஸ்மசானவாஸிநே | நம |
| 11. | ஓம் | மாம்ஸாசிநே | நம |
| 12. | ஓம் | ஸர்ப்பராசயே | நம |
| 13. | ஓம் | ஸ்மராந்தக்ருதே | நம |
| 14. | ஓம் | ரக்தபாய | நம |
| 15. | ஓம் | பானபாய | நம |
| 16. | ஓம் | ஸித்தாய | நம |
| 17. | ஓம் | கலாநிதயே | நம |
| 18. | ஓம் | காந்தாயே | நம |
| 19. | ஓம் | காமிநீ வசக்குதே | நம |
| 20. | ஓம் | வசினே | நம |
| 21. | ஓம் | ஸர்வஸித்தி ப்ரதாய | நம |
| 22. | ஓம் | வைத்யாய | நம |
| 23. | ஓம் | ப்ரபவே | நம |
| 24. | ஓம் | விஷணவே | நம |

திருச்சிற்றம்பலம்

# அருள்மிகு துர்க்கை அம்மை போற்றி

திருச்சிற்றம்பலம்

**இவ்வருச்சனை சேர்ந்த துதியை**

**அம்மையே ஏற்று அருள்க! அருள்கவே!!**

1. ஓம் அன்னையே என்றும் போற்றி நமஹ
2. ஓம் கேவலம் நீங்கப் போற்றி நமஹ
3. ஓம் ஆதியே நீயே இன்னலம் தருவாய் போற்றி நமஹ
4. ஓம் கைவல்யம் தாயே போற்றி நமஹ
5. ஓம் ஈபவள்நீயே உண்டிடும் உணவே போற்றி நமஹ
6. ஓம் கொண்கனை நீத்தாய் போற்றி நமஹ
7. ஓம் ஊக்கமே ஆக்கம் போற்றி நமஹ
8. ஓம் கோவலம் கொண்டாய் போற்றி நமஹ
9. ஓம் என்னலம் நீயே போற்றி நமஹ
10. ஓம் கௌடபர் செற்றாய் போற்றி நமஹ
11. ஓம் ஏற்றமே நீதான் போற்றி நமஹ
12. ஓம் காத்திட வருவாய் போற்றி நமஹ
13. ஓம் ஐயமில் மனத்தோப் போற்றி நமஹ
14. ஓம் கிளியெனும் அன்னை போற்றி நமஹ
15. ஓம் ஓர்மைகொள் பொருளே போற்றி நமஹ
16. ஓம் கீழ்மையைச் செற்றாய் போற்றி நமஹ
17. ஓம் ஆற்றவும் கற்றோர் எல்லாம் போற்றி நமஹ
18. ஓம் என்பவள் என்றும் போற்றி நமஹ
19. ஓம் அற்புதம் என்றும் சொல்லும் போற்றி நமஹ
20. ஓம் போற்றியுன் கமலப் பாதம் போற்றி நமஹ
21. ஓம் மாற்றமில் கருணைத் தெய்வம் போற்றி நமஹ
22. ஓம் குங்கும மலரே போற்றி நமஹ
23. ஓம் மார்க்கமும் துர்க்கை தானே போற்றி நமஹ
24. ஓம் ஆற்றவும் ஐயம் தீர்க்கும் போற்றி நமஹ

திருச்சிற்றம்பலம்



# அருள்மிகு திருமகள் போற்றி

திருச்சிற்றம்பலம்

**இவ்வருச்சனை சேர்ந்த துதியை**

**அம்மையே ஏற்று அருள்க! அருள்கவே!!**

1. திருமா மகளே செல்வீ போற்றி
2. திருமால் உரத்தில் திகழ்வோய் போற்றி
3. திருப்பாற் கடல்வரு தேவே போற்றி
4. இருநில மக்கள் இறைவீ போற்றி
5. அருளே உருவாய் அமைந்தோய் போற்றி
6. மருநிறை மலரில் வாழ்வோய் போற்றி
7. குருவென ஞானம் கொடுப்போய் போற்றி
8. இருளொழித் தின்பம் ஈவோய் போற்றி
9. அருள்பொழிந்தெம்மை ஆள்வோய் போற்றி
10. தெருள்தரு அறிவின் திறனே போற்றி
11. ஆறுதல் எமக்கிங் களிப்போய் போற்றி
12. சீறுதல் கொள்ளாத் திருவே போற்றி
13. ஊக்கம தளிக்கும் உயிரே போற்றி
14. ஆக்கம் ஈயும் அன்னாய் போற்றி
15. இறைவி வலப்பால் இருப்போய் போற்றி
16. பொறையுடன் உயிரைப் புணர்ப்போய் போற்றி
17. தொண்டரின் தொண்டுளம் சேர்ப்போய் போற்றி
18. அண்டர் போற்றும் அமலை போற்றி
19. நாரணற் கினிய நல்லோய் போற்றி
20. மாரனைப் பெற்ற மாதே போற்றி
21. உலகிடைப் பசிப்பிணி ஒழித்தருள் போற்றி
22. நலமெலாம் உயிர்க்கு நல்குக போற்றி
23. எங்களுக் கின்னருள் ஈந்தருள் போற்றி
24. மங்கலத் திருநின் மலரடி போற்றியே.

திருச்சிற்றம்பலம்

# அருள்மிகு கலைமகள் போற்றி

திருச்சிற்றம்பலம்

**இவ்வருச்சனை சேர்ந்த துதியை**
**அம்மையே ஏற்று அருள்க! அருள்கவே!!**

1. அறிவினுக் கறிவாய் ஆனாய் போற்றி
2. செறிஉயிர் நாத்தொறும் திகழ்வோய் போற்றி
3. ஆட்சிகொள் அரசரும் அறியாய் போற்றி
4. காட்சிசேர் புலவர்பால் கனிவோய் போற்றி
5. இல்லக விளக்கம் இறைவி போற்றி
6. நல்லக மாந்தரை நயப்பாய் போற்றி
7. ஈரமார் நெஞ்சினர் இடத்தோய் போற்றி
8. ஆரமார் தொடையால் அணிவோய் போற்றி
9. உலகியல் நடத்தும் ஒருத்தி போற்றி
10. அலகில் உயிர்க்கறி வளிப்போய் போற்றி
11. ஊனமில் வெள்ளை உருவினாய் போற்றி
12. கானக் குயில்மொழிக் கன்னியே போற்றி
13. எண்ணிலாப் புகழுடை எந்தாய் போற்றி
14. பண்ணியல் தமிழின் பாவாய் போற்றி
15. ஏழுல குந்தொழும் இறைவி போற்றி
16. சூழுநல் அன்பரின் துணைத்தாய் போற்றி
17. சோர்விலா அறிவின் தொடர்பே போற்றி
18. தீர்விலா நுண்கலைத் திறனே போற்றி
19. தமிழ்க்கலை தமிழ்ச்சுவை தந்தருள் போற்றி
20. தமிழ்மந் திரமொழித் தண்பயன் போற்றி
21. தாயே நின்னருள் தந்தாள் போற்றி
22. தூயநின் திருவடி தொழுதனம் போற்றி
23. திருவுடன் கல்வித் திறனருள் போற்றி
24. இருநிலத் தின்பம் எமக்கருள் போற்றியே.

திருச்சிற்றம்பலம்



# துதிப்பாடல்கள்

## விநாயகர் வணக்கம்

திருச்சிற்றம்பலம்

வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது - பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கை யான்பாதம்
தப்பாமற் சார்வார் தமக்கு. 1

ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினை
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே. 2

விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான் - விநாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாந் தன்மையினால்
கண்ணிற் பணிமின் கனிந்து. 3

பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான்தருவேன் - கோலம்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீஎனக்குச்
சங்கத் தமிழ்மூன்றும் தா. 4

திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டுஞ் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும் - உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனைமு கத்தானைக்
காதலாற் கூப்புவர்தம் கை. 5

திருச்சிற்றம்பலம்

# சிவபெருமான் வணக்கம்

திருச்சிற்றம்பலம்

அருட்சோதி தெய்வமெனை யாண்டு கொண்ட தெய்வம்
அம்பலத்தே யாடுகின்ற வானந்தத் தெய்வம்
பொருட்சாரு மறைகளெலாம்போற்றுகின்ற தெய்வம்
போதாந்தத் தெய்வமுயர் நாதாந்தந் தெய்வம்
இருட்பாடு நீக்கியொளி யீந்தருளுந் தெய்வம்
எண்ணியநா னெண்ணிவா றெனக்கருளுந் தெய்வம்
தெருட்பாடலுவந் தெனையுஞ் சிவமாக்குந் தெய்வம்
சிற்பசபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம் 1

வாழையடி வாழையென வந்ததிருக் கூட்ட
மரபினில்யா னொருவனன்றோவகையறியே னிந்த
ஏழைபடும் பாடுனக்குத் திருவுளச் சம்மதமோ
இதுதகுமோ இதுமுறையோ இதுதருமந் தானோ
மாழைமணிப் பொதுநடஞ்செய் வள்ளல்யா னுனக்கு
மகனலனோ நீயெனக்கு வாய்ந்தநந்தை யலையோ
கோழையுல குயிர்த்துயர மினிப்பொறுக்க மாட்டேன்
கொடுத்தருணின் னருளொளியை கொடுத்தருளிப்பொழுதே
2

பாரொடு விண்ணாய் பரந்தஎம் பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் தறையுறை சிவனே
ஆரொடு நோகேன் ஆர்க்கெடுத் துரைப்பேன்,
ஆண்டநீ யருளிலை யானால்
வார்கடல் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே. 3

திருச்சிற்றம்பலம்



# உமையம்மை வணக்கம்

மாதா பராசக்தி வையமெலா நீ நிறைந்தாய்
ஆதார முன்னையல்லால் ஆரெமக்குப் பாரினிலே
ரதா யினும்வழிநீ சொல்வாய்; எமதுயிரே,
வேதாவின் தாயே மிகப்பணிந்து வாழ்வோமே. 1

மலையிலே தான் பிறந்தாள், சங்கரனை மாலையிட்டாள்
உலையிலே யூதி யுலகக் கனல்வளர்ப்பாள்
நிலையி லுயர்ந்திடுவாள், நேரே யவள்பாதந்
தலையிலே தாங்கித் தரணிமிசை வாழ்வோமே. 2

ஆத்தாளை எங்கள் அபிராம வல்லியை அண்டம்எல்லாம்
பூத்தாளை மாதுளம் பூநிறத் தாளைப் புவிஅடங்கக்
காத்தாளை ஐங்கணை பாசாங் குசமும் கரும்பும்அங்கை
சேர்த்தாளை முக்கண்ணி யைத்தொழு வார்க்(கு)ஒரு தீங்கில்லையே. 3

அன்னை என்றதுமே என் நெஞ்சில்
ஆர்வம் பெருகுதம்மா - என்
சின்னஞ் சிறு விழிகள் உன்னைத்
தேடித் திரிகுதம்மா! 4

உதய முகம் காண என் மனம்
உன்மத்தம் கொள்ளுதம்மா - ஞானக்
கதிர் விழிக் கடலில் ஆடக்
கட்டற்றுத் துள்ளுதம்மா! 5

திருச்சிற்றம்பலம்

# முருகப்பெருமான் வணக்கம்

திருச்சிற்றம்பலம்

ஒருதரஞ் சதரவணபவா என்று சொல்பவர்
உளத்தினில் நினைத்த எல்லாம்
உடனேகை கூடுமென வேதங்கள் மொழியுதே
உண்மை அறிவான பொருளே
பரிவாகவே னந்தந்தரம் சரவண
பவாவென்று நான் சொல்லியும்
பாங்குமிகு காங்கேயா! அடியனேன் எண்ணியது
பலியா திருப்ப தேனோ?
குருபரா! குகா! சண்முகா!
குமரா! குகா! சண்முகா!
கோலாகலா! வெற்றிவேலா! எனக்கருள்
கொடுத் தாழ்வை முத்தையனே!
மருமலர்க் குழலழக! தேவகுஞ்சரி வள்ளி
மணவனே! என் துணைவனே! 1

ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவுவேண்டும்
உள் ஒன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவுகலவாமைவேண்டும்
பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண் டும்பொய்மை
பேசா திருக்கவேண்டும்
பெருநெறி பிடித்தொழுக வேண்டும்மத மானபேய்
பிடியா திருக்கவேண்டும்
மருவுபெண் ஆசையை மறக்கவே வேண்டும்உனை
மறவா திருக்கவேண்டும்
மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும் நோயற்ற
வாழ்வில்நான் வாழவேண்டும்
தருமமிகு சென்னையில் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே. 2

திருச்சிற்றம்பலம்



# நடராஜப் பெருமான் வணக்கம்

திருச்சிற்றம்பலம்

தாயாரிருந்தென்ன தந்தையுமிருந்தென்ன தன் பிறவியுறவுகோடி தனமலை குவித்தென்ன கனபெயரெடுத்தென்ன தாரணியை யாண்டுமென்ன சேயர்களிருந்தென்ன குருவா இருந்தென்ன சீடர்களிருந்துமென்ன சிந்துபல கற்றென்ன நித்தமும் விரதமங்கள் செய்தென்ன நதிகளெல்லாம் ஓயாது மூழ்கினும் என்ன பலன் எமனோலை ஒன்றைக் கண்டு தடுக்க உதவுமோ இதுவெல்லாம் தந்தையுறவென்றுதான் உன்னிருபாதம் பிடித்தேன். யார்மீது உன் மனதிருந்தாலும் முன் கடைக்கண் பார்வை அது போதும் ஈசனே சிவகாமி நேசனே யெனை யீன்ற தில்லை வாழ் நடராஜனே. 1

காயமுன் மரமீது பூபிஞ் சறுத்தனோ கன்னியர்கள் பழி கொண்டேனோ கடனென்று பொருள்பறித்தே வயிறெரித்தனோ கிளைவழியில் முள்ளிட்டனோ தாயாருடன் பிறவிக்கென்னவினை செய்தரோன தந்த பொருளிலையென்றனோ தானென்று தெரிவித்துக் கொலை களவு செய்தனோதவசிகளை யேசினேனோ வாயாரப் பொய் சொல்லி வீண்பொருள் பறித்தனோ வானவரைப் பழித்திட்டனோ வடவுபோலப் பிறரைச் சேர்க்கா தடித்தனோ வந்தபின் என்செய்தேனோ ஈயாத லோபியென்றே பெயரெடுத்தனோ யெல்லாம் பொறுத் தருளுவாய் யீசனே சிவகாமி நேசனே யெனையீன்ற தில்லைவாழ் நடராஜனே. 2

திருச்சிற்றம்பலம்

# தெட்சணாமூர்த்தி வணக்கம்

திருச்சிற்றம்பலம்

மும்மலம்வேறுபட்டொழிய மொய்த்துயிர்
அம்மலர்த்தாணிமுலடங்கு முண்மையைக்
கைம்மலர்க்காட்சியிற் கதுவநல்கிய
செம்மலைபலதுளஞ் சிந்தியாதரோ. 1

கல்லாலின்புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதற்கற்ற கேள்வி
வல்லார்கணால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய்மறைக்கப் பாலாய்
எல்லாமாயல்லதுமா யிருந்ததனை
யிருந்தபடி யிருந்துகாட்டிச்
சொல்லாமற்சொன்னவரை நினையாம
னினைச்துபவத் தொடக்கைவெல்வாம். 2

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதற்கற்ற கேள்வி
வல்லார்கணால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய்மறைக்கப் பாலாய்
எல்லாமாயல்லதுமா யிருந்தவனை
யிருந்தபடி யிருந்துகாட்டிச்
சொல்லாமற்சொன்னவரை நினையாம
னினைந்துபவத் தொடக்கைவெல்லாம். 3

திருச்சிற்றம்பலம்



# பிரமா வணக்கம்

தாமரைப் பொருட்டில் வைகும்
தண்ணளிக் கருணை கொண்டே
மாமறை துணையாய்க் கொண்டு
மன்பதை படைக்கும் வள்ளல் போற்றி

# மஹா விஷ்ணு வணக்கம்

பங்கயக் கண்ணன் என்கோ?
பவளச்செவ் வாயன் என்கோ?
அங்கதிர் அடியன் என்கோ?
அஞ்சன வண்ணன் என்கோ?
செங்கதிர் முடியன் என்கோ?
திருமாறு மார்பன் என்கோ?
சங்குசக் கரத்தான் என்கோ?
சாதிமா ணிக்கத்தையே? 1

குலம்தரும் செல்வந் தந்திடும் அடியார்
படுதுயர் ஆயின எல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும் பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றுந் தந்திடும் பெற்ற
தாயினும் ஆயின செய்யும்
நலந்தரும் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராயணா வென்னும் நாமம் 2

பச்சைமா மலைபோல் மேனி!
பவளவாய்க் கமலச் செங்கண்
அச்சுதா! அமர ரேரே
ஆயர்தம் கொழுந்தே என்னும்
இச்சுவை தவிர யான்போய்
இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
அரங்கமா நகரு ளானே 3

# துர்க்காதேவி வணக்கம்

துர்க்கையென் றால்துயர் விலகி மறைந்திடும்
        சொல்லிடு வாய்மனனே
தூயவள் இவள்திரு அடிமலர் பணிந்திட
        துயர்பல விலகிடுமே
கூர்படு சூலம் ஏந்தியே நடனம்
        புரிந்திடும் அன்னையிவள்
குவலயம் மீதெமைக் காத்தருள் அன்னைபொன்
        அடியினைப் பணிமனமே. 1

துட்டரை வீழ்த்தித் துயர்பல நீக்கி
        தூயநல் ஒளிதருவாள்
துணையெனத் தன்னடி பணிந்திடு வார்வினை
        மாற்றியே மகிமைசெய் வாள்
பட்டர்பி ரானிவள் அடியினைப் பணிந்திடப்
        பார்புகழ் நிலவுதந்தாள்
பாரினில் எமக்குறு துணையென விளங்கிடப்
        பளிங்குறு சிலையானாள் 2

வெற்றி நலந்தரும் கொற்றவை நீயே
        வேண்டும் வரமருள்வாய் எங்கள்
வேதனை யாவையும் நீக்கியே நல்லருள்
        ஒளிநலம் மிகுதருவாய்
சொற்றமிழ் மாலைகள் பாடியே துதித்திட
        சோகவி னையறுப்பாய்
துயர்கெட வாழ்வினில் நல்லருள் சிந்தியே
        சுகமுறு நிலையருள்வாய் 3



# திருமகள் வணக்கம்

மலரின் மேவு திருவே - உன்மேல்
        மையல்பொங்கி நின்றேன்
நிலவு செய்யு முகமும் - காண்பார்
        நினைவழிக்கும் விழியும்
கலகலென்ற மொழியும் - தெய்வக்
        களிதுலங்கு நகையும்
இலகு செல்வ வடிவம் - கண்டுன்
        இன்பம்வேண்டு கின்றேன்! 1

பொன்னு நல்ல மணியும் - சுடர்செய்
        பூண்களேந்தி வந்தாய்
மின்னு நின்றன் வடிவிற் - பணிகள்
        மேவிநிற்கு மழகை
என்னுரைப்ப னேடீ - திருவே,
        என்னுயிர்க்கோ ரமுதே,
நின்னை மார்பு சேரத் - தழுவி
        நிகரிலாது வாழ்வேன்! 2

செல்வ மெட்டு மெய்தி - நின்னாற்
        செம்மையேறி வாழ்வேன்.
இல்லை யென்ற கொடுமை - உலகில்
        இல்லையாக வைப்பேன்
முல்லை போன்ற முறுவல் - காட்டி
        மோகமாவதை நீக்கி
எல்லையற்ற சுவையே - எனை நீ
        என்றும் வாழ வைப்பாய்! 3

மகாகவி பாரதியார்

# கலைமகள் வணக்கம்

ஆய கலைகள் அறுபத்து நான்கினையும்.
ஏய உணர்விக்கும் என்னம்மை - தூய
உருப்பளிங்கு போல்வாள் என்னுள்ளத்தினுள்ளே
இருப்பள் இங்கு வாராதிடர்! 1

வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள் - வெள்ளை
அரியாசனத்தில் அரசரோடெம்மைச்
சரியாசனம் வைத்த தாய்! 2

படிக நிறமும் பவளச் செவ்வாயும்
கடிகமழ் பூந்தாமரைபோல் கையும் - துடியிடையும்
அல்லும் பகலும் அனவரதமும் துதித்தால்
கல்லும் சொல்லாதோ கவி? 3

வாணி கலைத்தெய்வம், மணிவாக் குதவிடுவாள்
ஆணிமுத்தைப் போலே அறிவுமுத்து மாலையினாள்
காணுகின்ற காட்சியாய்க் காண்பதெல்லாங் காட்டுவதாய்
மாணுயர்ந்து நிற்பாள் மலரடியே சூழ்வோமே. 4

அம்மா தாயே கலைவாணி
நீ என் நாவைக் காப்பாயே
இம்மாநிலத்தின் இனிமையெல்லாம்
இருக்குதுன் நாவின் அசைவினிலே! 5



# மாரி தேவி வணக்கம்

இமயத்தில் பிறந்தாலும் இதயத்தில் வாழ்கின்ற
இணையற்ற தாயமுதமே!
இல்லாமை இல்லாமல் எல்லோரும் வாழ்ந்திட
எழுந்தருளும் அருளமுதமே
சமயத்தில் வரும் இன்னல் தகர்த்திடும் அன்னையே
சமயபுர மாரியம்மா
சஞ்சலம் நீக்கிடச் செஞ்சுடர் காட்டிடும்
சக்தியே தேவியம்மா
உமையவளின் மறுவுருவாய் உலகத்தைக் காக்கின்ற
ஓங்கார வல்லி நீயே!
உன் அருளில் பிள்ளைகள் உயர்வோடு வாழ்ந்திட
உற்ற வழி சொல்லுவாயே!
அமைத்திட்ட வாழ்க்கையும் சக்கரமாய் சுற்றிட
ஆறுதல் செப்புவாயே
ஆறுதல் கூறியே மாறுதல் தருகின்ற
அம்மையே மாரியம்மையே!

# ஸ்ரீ வைரவர் வணக்கம்

பரமனைமதித்திடாப் பங்கயாசனன்
ஒருதலைக்கிள்ளியே யொழிந்தவானவர்
குருதியும்கந்தையுங் கொண்டுதண்டமுன்
புரிதருவடுகனைப் போற்றிசெய்குவாம் 1

வெஞ்சினப்பரியழன் மீதுபோர்த்திடு
மஞ்சனப்புகையென வாலமாமெனச்
செஞ்சுடர்ப்படிவமேற் செறித்தமாமணிக்
கஞ்சுக்கடவுள் பொற்கழல்களேத்துவாம் 2

## காளி தேவி வணக்கம்

யாது மாகி நின்றாய் - காளீ !
எங்கும்நீ நிறைந்தாய்
தீது நன்மை யெல்லாம் - நின்றன்
செயல்களன்றி யில்லை
போது மிங்கு மாந்தர் - வாழும்
பொய்மை வாழ்க்கை யெல்லாம்
ஆதி சக்தி, தாயே - என்மீ
தருள்புரிந்து காப்பாய்.

கர்ம யோக மொன்றே - உலகில்
காக்குமென்னும் வேதம்;
தர்ம நீதி சிறிதும் - இங்கே
தவறலென்ப தின்றி
மர்ம மான பொருளாம் - நின்றன்
மலரடிக்க ணெஞ்சம் -
செம்மை யுற்று நாளும் - சேர்ந்தே
தேசுகூட வேண்டும்.

காளி மீது நெஞ்சம் - என்றும்
கலந்துநிற்க வேண்டும்
வேளை யொத்த விறலும் - பாரில்
வேந்தரேத்து புகழும்
யாளி யொத்த வலியும் - என்றும்
இன்பநிற்கு மனமும்
வாழி யீதல் வேண்டும் - அன்னாய்,
வாழ் கநின்றன் அருளே.



## ஆஞ்சநேயர் வணக்கம்

அஞ்சனை செல்வ போற்றி!
அநும! எம் ஐய போற்றி!
நெஞ்சினில் இராம நாமம்
நிறைந்திடும் நிமல போற்றி
சஞ்சலம் தவிர்ப்பாய் போற்றி
சற்குருநாதா போற்றி!
தஞ்ச மென் றடைந்தோரை
மும்பொதும் காப்பாய் போற்றி! 1

அஞ்சிலே ஒன்று பெற்றான்
அஞ்சிலே ஒன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்றா றாக
ஆரியர் காக ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற
அணங்கைக் கண்டு அயலாரூரில்
அஞ்சிலே ஒன்றை வைத்தான்
அவன் எம்மை அளித்துக் காப்பான் 2

அஞ்சனன் ராமன் வரவாலே
அஞ்சிலம் வஞ்சம் எனவோடி
தஞ்சமென் றென்றுமுன் துணைப்பாதம்
தண்ணிகொண்டண்ணன் புடைத்தானே
தந்தையின் சொல்லைக் கடவா தோய்
தங்கிடும் இன்பம் தருவாயே
சிந்தையான் உன்னை கதிர்சேயே
என்றனை நன்றே அனுமானே 3

# சண்டேஸ்வரர் வணக்கம்

பொன்னங்கடுக்கை முடிவேய்ந்த
புனிதறமைக்கு பொருளன்றி
மின்னுங்கலனாடைகள் பிறவும்
வேறுதனக் கென்றமையாமே
மன்னுந்தலைவன் பூசனையில்
மல்கும்பயனை யடியார்கள்
துன்னும்படி பூசனைகொள்ளுந்
தூயோனடித்தாமரை தொழுவாம் 1

மனாதிகளுக் கெட்டாத பரமா னந்த
வாழ்வினையங் கோரிலிங்க மணலாற் கூப்பித்
தனாதிதயந் தனினின்றுந் தாபித் தான்பால்
தழைத்தவன்பா லாட்டவந்த தடுக்கத் தாதை
எனாதவன்ற நிருபதமு மழுவாற் றுண்டித்
திகழ்ந்தவனைப் பரபதத்து ளிருத்தித் தானும்
பினாகியரு ளடைந்தவிறற் சண்டேசன்றாள்
பிரசமல ரிறைதிறைஞ்சிப் பரசு வாமே. 2



# நவக்கிரக பகவான்களுக்கு வணக்கம்

**ஞாயிறு பகவான்**

சீலமாய்வாழ சீரருள் புரியும்
ஞாலம் புகழும் ஞாயிறே போற்றி
சூரியா போற்றி சுந்தரா போற்றி
வீரியா போற்றி வினைகள் களைவாய்.

**திங்கள் பகவான்**

எங்கள் குறைகள் எல்லாம் தீர்க்கும்
திங்களே போற்றி திருவருள் புரிவாய்
சந்திரா போற்றி சற்குணா போற்றி
அங்கம் தீர்ப்பாய் சங்கரா போற்றி

**செவ்வாய் பகவான்**

சிறப்புறு மணியே செவ்வாய் தேவே
குறைவில்லாதருள்வாய் குணமுடன் வாழ
மங்கலச் செவ்வாய் மலரடி போற்றி
ஆங்காரஹனே அவதிகள் நீக்கு.

**புதன் பகவான்**

இதமுற வாழ இன்னல்கள் நீக்கு
புதபகவானே பொன்னடி போற்றி
பதம் தந்து ஆள்வாய் பண்ணொலியானே
உதவியாய் அருளும் உத்தமா போற்றி

**வியாழன் பகவான்**

குணமுள்ள வியாழ குருபகவானே
மணமுள்ள வாழ்வு மகிழ்வுடன் அருள்வாய்
பிரகஸ்பதி வியாழ பரகுருநேசா
கிரகதோஷ மின்றிக் கடாட்சித் தருள்வாய்.

**வெள்ளி பகவான்**

சுக்கிர மூர்த்தி சுகமிக ஈவாய்
வக்கிர மின்றி வரமிகத் தருவாய்
வெள்ளிச் சுக்கிர வித்தக வேந்தே
அள்ளிக் கொடுப்பாய் அடியார்க்கருளே.

**சனி பகவான்**

சங்கடம் தீர்க்கும் சனி பகவானே
மங்களம் பொங்க மனம் வைத்தருள்வாய்
சச்சரவின்றி சனீஸ்வரத் தேவே
இச்சகம் வாழ இன்னருள் தாதா.

**ராகு பகவான்**

அரவேனும் ராகு ஐயனே போற்றி
கரவாதருள்வாய் கஷ்டங்கள் நீக்கி
ஆக அருள்புரி அனைத்திலும் வெற்றி
இராகு கனியே ரெம்மியா போற்றி

**கேது பகவான்**

கேது தேவே கீர்த்தித் திருவே
பாதம் போற்றி பாபம் தீர்ப்பாய்
வாதம் வம்பு வழங்கள் இன்றி
கேது தேவே கேண்மையாய் ரஷி.

இந்த நவக்ரக ஸ்தோத்திரம் சொல்லி ஒவ்வொரு கிரகத்திற்கும் ஒரு மலர் வீதம் ஒன்பது மலரை இடவும்.



# அருட்பாக்கள்



ஔவையார் அருளியது

## விநாயகர் அகவல்

சீதக் களபச் செந்தாமரைப்பூம்
பாதச் சிலம்பு பலஇசைபாடப்
பொன்அரை ஞாணும் பூந்துகில் ஆடையும்
வண்ண மருங்கில் வளர்ந்தழ கெறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்கு சிந்தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்
நெஞ்சிற் குடிகொண்ட நீலமேனியும்
நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்
இரண்டு செவியும் இலங்குபொன் முடியும்
திரண்டமுப் புரிநூல் திகழொளி மார்பும்
சொற்பதம் கடந்த துரிய மெய்ஞ்ஞான
அற்புதம் நின்ற கற்பகக் களிறே
முப்பழம் நுகரும் மூஷிக வாகன
இப்பொழுது என்னை ஆட்கொள வேண்டித்

தாயா யெனக்குத் தானெழுந்தருளி
மாயப்பிறவி மயக்கம் அறுத்துத்
திருந்திய முதல்ஐந் தெழுத்துந் தெளிவாய்ப்
பொருந்தவே வந்தென் உளந்தனிற் புகுந்து
குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திறமிது பொருளென
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளிக்
கோடா யுதத்தாற் கொடுவினை களைந்தே
உவட்டா உபதேசம் புகட்டியென் செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையும் காட்டி
ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணையின் இனிதெனக் கருளிக்
கருவிகள் ஒடுங்கும் கருத்தறி வித்து
இருவினை தன்னை அறுத்திருள் கடிந்து
தலமொரு நான்குந் தந்தெனக் கருளி
மலமொரு மூன்றின் மயக்க மறுத்தே
ஒன்பது வாயில் ஒருமந் திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதுங் காட்டி
ஆறா தாரத்து அங்குச நிலையும்
பேறா நிறுத்திப் பேச்சுரை அறுத்தே
இடைபிங் கலையின் எழுத்தறி வித்துக்
கடையிற் சுழிமுனைக் கபாலமுங் காட்டி
மூன்று மண்டலத்தின் முட்டிய துணின்
நான்றெழு பாம்பின் நாவி லுணர்த்திக்
குண்டலி யதனிற் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து.
மூலா தாரத்தின் மூண்டெழு கனலைக்
காலா லெழுப்புங் கருத்தறி வித்தே



அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையுங் கூறி
இடைச்சக் கரத்தின் உறுப்பையுங் காட்டி
சண்முக தூலமும் சதுர்முகச் சூ'மும்
எண்முக மாக இனிதெனக் கருளிப்
புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரியெட்டு நிலையுந் தெரிசனப் படுத்திக்
கருத்தினிற் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி இனிதெனக் கருளி
என்னை அறிவித்து எனக்கருள் செய்து
முன்னை வினையின் முதலைக் களைந்தே
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே எந்தன் சிந்தை தெளிவித்து
இருள்வெளி இரண்டிற் கொன்றிடமென்ன
அருள்தரும் ஆனந்தத்து அழுத்தி என் செவியில்
எல்லை யில்லா ஆனந்தம் அளித்து
அல்லல் களைந்து அருள்வழிகாட்டிச்
சத்தத்தி னுள்ளே சதாசிவங் காட்டிச்
சித்தத்தி னுள்ளே சிவலிங்கம் காட்டி
அணுவிற் கணுவாய் அப்பாலுக் கப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்
கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தின் அரும்பொருள் தன்னை
நெஞ்சக் கருத்தின் நிலையறி வித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை யாண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே!

விநாயகர் அகவல் முற்றிற்று



# சிவபுராணம்

திருச்சிற்றம்பலம்

நமச்சிவாய வாழ்க! நாதன்தாள் வாழ்க!
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள் வாழ்க!
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவ னடிவாழ்க

வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க!
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க!
புறந்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க!
கரங்குவிவார் உண்மகிழும் கோன்கழல்கள் வெல்க!
சிரங்குவிவார் ஓங்குவிக்குஞ் சீரோன்கழல் வெல்க!

ஈசனடி போற்றி எந்தை யடிபோற்றி!
தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி!
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி!
மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி!
சீரார் பெருந்துறைநந் தேவ னடிபோற்றி!

ஆராத இன்பம் அருளு மலைபோற்றி!
சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவனருளாலே அவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுது மோய உரைப்பனியான்



கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை இலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்

எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யவென் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே

வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே

ஆக்கம் அளவிறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய், அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே!
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே!

கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர் களேத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான் வல்வினையேன் தன்னை

மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவ மென்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல் போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய

விலங்கு மனத்தால் விமலா உனக்குக்
கலந்தவன் பாகிக் கசிந்துள் உருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்

தாயிற் சிறந்த தயாவான தத்துவனே!
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே!
தேசனே தேனா ரமுதே சிவபுரனே!
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே!
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்

பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே!
ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே!
நீராய் உருக்கியென் ஆருயிராய் நின்றானே!
இன்பமுந் துன்பமும் இல்லானே உள்ளானே!



அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே!
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார்தங்கருத்தின்

நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே!
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே!
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாதநுண்ணுணர்வாய்

மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான உண்ணார் அமுதே உடையானே!
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் ஐயா அரனேயோ என்றென்று

போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப்புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே!
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே!

அல்லற் பிறவி அறுப்பானே ஓவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்

# நடராஜப்பத்து

திருச்சிற்றம்பலம்

மண்ணாதி ஆண்டமொடு விண்ணாதி
ஆண்டம்நீ மறைநான்கின் அடிமுடியும் நீ
மதியுமநீ ரவியும்நீ புனலும் நீ
அனலும்நீ மண்டலம் இரண்டேழும் நீ
பெண்ணும்நீ ஆணும்நீ பல்லுயிர்க்
குயிரும்நீ பிறவும்நீ ஒருவநீயே
பேதாதி பேதம்நீ பாதாதி
கேரம்நீ பெற்றதாய் தந்தைநீயே
பொன்னும்நீ பொருளும்நீ இருளும்நீ
ஒளியும்நீ போதிக்க வந்த குருநீ
புகழொணாக் கிரகங்கள் ஒன்பதும்
நீஇந்தப் புவனங்கள் பெற்றவனும் நீ
எண்ணரிய ஜீவகோடிகள் ஈன்ற அன்பனே
என்குறைகள் யாருக்குரைப்பேன்
ஈசனே சிவகாமி நேசனே எனையீன்ற
தில்லை வாழ் நடராஜனே. 1

மானாட மயிலாட மதியாடப்
புனலாட மங்கைசிவ காமியாட
மாலாட நூலாட மறையாடத்
திறையாட மறைதந்த பிரமனாட
கோனாட வானுலகக் கூட்டம்
எல்லாம் ஆட குஞ்சர முகத்தனாட
குண்டலம் இரண்டாடத் தண்டைபுலி
உடையாட குழந்தைமுரு கேசனாட
ஞானசம் பந்தரொடு இந்திராதி
பதினெட்டு முனியட்டபா லகருமாட
நரைதும்பை அறுகாட நந்திவா
கனமாட நாட்டியப் பெண்களாட
வினையோட உனைப்பாட எனைநாடி
இதுவேளை விருதோடு ஆடவருவாய்
ஈசனே சிவகாமி நேசனே எனையீன்ற
தில்லை வாழ் நடராஜனே 2

கடல்ஈன்ற புவிமீதில் அலையேன்ற
உருக்கொண்டு கனவென்ற வாழ்வைநம்பி
காற்றென்ற மூவாசை மாருதச்
சுழலிலே கட்டுண்டு நித்தநித்தம்
உடலென்ற கும்பிக்கு உணவென்ற
இறைதேடி ஓயாமல் இரவுபகலும்
உண்டுண் டுறங்குவதைக் கண்டதே
அல்லாதொருபயன் அடைந்திலேனை
தடமென்ற மிடிகரையில் பந்தபா
சங்களெனும் தாபரப் பின்னலிட்டுத்
தாயென்று சேயென்று நீயென்று
நானென்று தமியேனை இவ்வண்ணமாய்
இடையென்று கடைகின்ற எனென்று
கேளாதிருப்பதுன் அழகாகமோ
ஈசனே சிவகாமி நேசனே யெனையீன்ற
தில்லைவாழ் நடராஜனே. 3

வம்புகூ னியமல்ல வைப்பல்ல
மாரணம் தம்பனம் வசியமல்ல
பாதாள வஞ்சனம் பரகாயப்
பிரவேசம் அதுவல்ல ஜாலமல்ல
அன்புகுண் டுகள்விலக மொழியுமந்
திரமல்ல ஆகாயக் குளிகையல்ல
அன்போடு செய்கின்ற வாதமோ

டிகளல்ல அரியமோ கனமுமல்ல
கும்பமுனி மச்சமுனி சட்டமுனி
பிரும்மரிஷி கொங்கணர் புலிப்பாணியும்
கோரக்கர வள்ளுவர் போகமுனி
இவரெலாம் கூறிமும் வைத்தியமல்ல
என்மனதுன் னடிவிட்டு நீங்காது
நிலைநிற்க வேயுளவு புகலவருவாய்
ஈசனே சிவகாமி நேசனே
எனையீன்ற தில்லைவாழ் நடராஜனே 4

நொந்துவந் தேனென்று ஆயிரஞ்
சொல்லியும் செவியென்ன மந்தமுன்டோ
நுட்பநெறி யறியாத பிள்ளையப்
பெற்றபின் நோக்காத தந்தையுண்டோ
சந்ததமுந் தஞ்சமென் றடியைப்
பிடித்தபின் தளராத நெஞ்சமுண்டோ
தந்திமுக னறுமுகன் இருபிள்ளை
இல்லையோ தந்தைநீ மலடுதானோ
விந்தையும் ஜாலமும் உன்னிடம்
இருக்குதே வினையொன்று மறிகிலேனே
வேதமும் சாஸ்திரமும் உன்னையே
புகழுதல் வேடிக்கை இதுவல்லவோ
இந்தவுல கிரேழும் எனளித்
தாய்சொல்லும் இனியுன்னை விடுவதில்லை
ஈசனே சிவகாமி நேசன
எனையீன்ற தில்லைவாழ் நடராஜனே 5

வழிகண்டு உன்னடியைத் துதியாத
போதிலும் வாஞ்சையில் லாதபோதிலும்
வாலாய மாய்க்கோயில் கற்றாத
போதிலும் வஞ்சமே செந்தபோதிலும்
பொழியெகனன மொகனையில் லாமலே



பாடினும் மூர்க்குனேன் முகடாகினும்
மோசமே செய்யினும் தேசமேக
வரினுமுழு காமியே ஆகினும்
பழியெனக் கல்லவே தாய்தந்தைக்
கல்லவோ பார்த்தவர்கள் சொல்லார்களோ
ஊரறிய மனைவிக்குப் பாதியுடல்
ஈந்தநீ பாவனைக் காககொணாதோ
எழில்பெரிய அண்டங்க ளடுக்கா
யமைத்தநீ யென்குறைகள் தீர்த்தல்பெரிதோ
ஈசனே சிவகாமி நேசனே
எனையீன்ற தில்லைவாழ் நடராஜனே 6

அன்னைதந் தைகளென்னை யீன்றதற் கழுவனோ
அறிவிலாததற் கழுவனோ
அல்லாமல் நான்முகன் தன்னையே நோவனோ
ஆசைமூன்றுக் கழுவனோ
முன்பிறப் பென்னவினை செய்தனென் றழுவனோ
என்மூடவறிவுக் கழுவனோ
முன்னிலென் வினைவந்து மூளுமென் றழுவனோ
முத்திவரு மென்றுணர்வனோ
தன்னைநோக் தழுவனோ உன்னைநோக் தழுவனோ
தவமென்ன வென்றழுவனோ
தையலர் கழுவனோ மெய்வளர்க் கழுவனோ
தரித்திர திகைக்கழுவனோ
இன்னமென் பிறவி வருமென் றழுவனோ
யெல்லாமுகாக்க வருவாய்
யீசனே சிவகாமி நேசன பொகையீன்ற
தில்லைவாழ் நடராசனே. 7

காயாமுன் மரமீது பூபிஞ்
சறுத்தெனோ கன்னியர்பழி கொண்டெனோ
கடனென்று பொருள்பறித் தேவயிறு
றெரிதனோ கிளைவழியில் முன்னிட்டெனே
தாயாரு டன்பிறவிக் கென்னவினை
செய்குதனோ தந்தபொரு ளிலையென்றெனோ
தானென்று கரிவித்துக் கொலைகளவு
செய்தெனோ தவசிகளை யேசினேனோ
வாயாரப் பொய்சொல்லி வீண்பொருள்
பறித்தெனோ வானவரைப் பழித்திட்டெனோ
வடவுபோலப் பிறரைச் சேர்க்கா
தடித்தனோ வந்தபின் என்செய்தெனோ
ஈயாத லோபியென் றேபெயர்
எடுத்தனோ எல்லாம் பொருத்தருளுவாய்
ஈசனே சிவகாமி நேசனே
எனையீன்ற தில்லைவாழ் நடராசனே 8

தாயா ருந்தென்ன தந்தையு
மிருந்தென்ன தன்பிறவி யுறுவுகோடி
தனமலை குவிந்தென்ன கனபெய
ரெடுத்தென்ன தரணியை ஆண்டுமென்ன
சேயர்க ளிருந்தென்ன குருவாயி
ருந்தென்ன சீடர்களி ருந்துமென்ன
சித்துபன கற்றென்ன நித்தமும்
விரதங்கள் செய்தென்ன நதிகளெல்லாம்



ஓயாது மூழ்கினும் என்னபலன்
எமனோலை ஒன்றைக் கண்டு
தடுக்க உதவுமோ இதுவெல்லாம்
தந்தையுற வென்றுதான் உன்னிரு
பாதம் பிடித்தேன் யார்மீதுன்
மனமிருந்தாலுந் கடைக்கண்பார்வை அதுபோதும்
ஈசனே சிவகாமி நேசனே
எனையீன்ற தில்லைவாழ் நடராஜனே 9

இன்னமுஞ் சொல்லவோ உன்மனங்
கல்லோ இரும்போ பெரும்பாறையோ
இருசெவியும் மந்தமோ கேளாது
அந்தமோ இதுவுனக் கழகுதானோ
என்னென்ன மோகமோ இதுவென்ன
சாபமோ இதுவேயுன் செய்கைதானோ
இருபிள்ளை தாபமோ யார்மீது
கோபமோ ஆனாலும் யான் விடுவனோ
உன்னைவிட் டெங்குசென் றானும் விழ
லாவனோ நானுனை யடுத்துங் கெடுவனோ
ஓகோவிதுன் குற்றமென்குற்ற மொன்றில்லை
உற்றுப்பார் பெற்றவையா
என்குற்ற மாயினும் உன்குற்ற
மாயினும் இனியருள ளிக்கவருவாய்
ஈசனே சிவகாமி நேசனே
எனையீன்ற தில்லைவாழ் நடராஜனே 10

திருச்சிற்றம்பலம்

உ
சிவமயம்

அபிராமிப்பட்டர் அருளிய

# அபிராமியம்மை பதிகம்

### காப்பு

தூயதமிழ்ப் பாமாலை சூட்டுதற்கு மும்மதநால்
வாயைங் கரன்றாள் வழுத்துவாம் - நேயர்நிதம்
எண்ணும் புகழ்க்கடவூர் எங்களபி ராமவல்லி
நண்ணும்பொற் பாதத்தில் நன்கு.

### நூல்
### ஆசிரிய விருத்தம்

கலையாத கல்வியும் குறையாத வயதுமோர்
கபடுவா ராத நட்பும்
கன்றாத வளமையும் குன்றாத இளமையும்
கழுபிணியி லாத உடலும்
சலியாத மனமும்அன் பகலாத மனைவியும்
தவறாத சந்தா னமும்
தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்
தடைகள் வாராத கொடையும்
தொலையாத நிதியமும் கோணாத கோலுமொரு
துன்பமில் லாத வாழ்வும்
துய்யநின் பாதத்தில் அன்பும்உதவிப் பெரிய
தொண்டரொடு கூட்டு கண்டாய்
அலையாழி அறிதுயிலு மாயனது தங்கையே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே!



காரளக பந்தியும் பந்தியின் அலங்கலும்
கரிய புருவச் சிலைகளும்
கர்ணகுண் டலமுமதி முகமண்டலம் நுதற்
கத்தூரிப் பொட்டு மிட்டுக்
கூரணிந் திடுவிழியும் அமுதமொழியுஞ் சிறிய
கொவ்வையின் கனிய தரமும்
குமிழனைய நாசியும் முத்தநிகர் தந்தமும்
கோடுசோ டான களமும்
வாரணிந் திருமாந்த வனமுலையும் மேகலையும்
மணிநூ புரப்பா தமும்
வந்தெனது முன்னின்று மந்தகா சமுமாக
வல்வினையை மாற்று வாயே
ஆரமணி வானிலுறை தாரகைகள் போலநிறை
ஆதிகட வூரின் வாழ்வே
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 2

மகரவார் குழல்மேல் அடர்ந்துகுமிழ் மீதினில்
மறைந்து வாளைத் துறந்து
மைக்கயலை வேண்டிநின் செங்கமல விழியருள்
வரம்பெற்ற பேர்க ளன்றோ?
செகமுழுமீ வொற்றைத் தனிக்குடை கவித்துமேற்
சிங்கா தனத்தி லுற்றுச்
செங்கோலும் மனுநீதி முறைமையும் பெற்றுமிகு
திகிரியுல காண்டு பின்பு
புகர்முகத்(து) ஐராவதப் பாக ராகிநிரை
புத்தேளிர் வந்து போற்றிப்
போக தேவேந்திரன் எனப்புகழ விண்ணில்
புலோமிசை யொடுஞ்சு கிப்பர்
அகரமுத லாகிவளர் ஆனந்த ரூபியே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி அபிராமியே! 3

மறிகடல்கள் ஏழையுந் திகிரிஇரு நான்கையும்
மாதிறல் கரியெட் டையும்
மாநாகம் ஆனதையும் மாமேரு என்பதையும்
மாகூர்மம் ஆனதையு மோர்
பொறியரவு தாங்கிவரு புவனமீ ரேழையும்
புத்தேளிர் கூட்டத் தையும்
பூமகளை யுந்திகிரி மாயவனை யும்அரையிற்
புலியாடை உடையா னையும்
முறைமுறைக ளாயீன்ற முதியவர்களாய்ப் பழைமை
முறைகள் தெரியாத நின்னை
மூவுலகி லுள்ளவர்கள் வாலையென்(று) அறியாமல்
மொழிகின்ற தேது சொல்வாய்
அறிவுநிறை விழுமியர்தம் ஆனந்த வாரியே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 4

வாடாமல் உயிரெனும் பயிர்தழைத் தோங்கிவர
அருள்மழை பொழிந்தும் இன்ப
வாரிதியிலே நின்ன தன்பெனுஞ் சிறகால்
வருந்தா மலேய ணைத்துக்
கோடாமல் வளர்சிற் றெறும்புமுதல் குஞ்சரக்
கூட்டமுத லான சீவ
கோடிகள் தமக்குப் புசிக்கும் புசிப்பினைக்
குறையாம லேகொ டுத்து
நீடாழி யுலகங்கள் யாவையும் நேயமாய்
நின்னுதர பந்தி பூக்கும்
நின்மலி! அகிலங்க ளுக்கன்னை என்றோதும்
நீலியென்(று) ஓது வாரோ?
ஆடாத நான்மறையின் வேள்வியால் ஓங்குபுகழ்
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 5



பல்குஞ் சரந்தொட் டெறும்புகடை யானதொரு
பல்லுயிர்க் குங்கல் லிடைப்
பட்டதே ரைக்கும்அன் றுற்பவித் திடுகருப்
பையுறு சீவனுக்கும்
மல்குஞ் சராசரப் பொருளுக்கும் இமையாத
வானவர் குழாத்தி னுக்கும்
மற்றுமொரு மூவர்க்கு மியாவர்க்கும் அவரவர்
மனச்சலிப் பில்லா மலே
நல்குந் தொழிற்பெருமை உண்டா யிருந்துமிகு
நவநிதி உனக்கி ருந்தும்
நானொருவர் வறுமையிற் சிறியனா னால்அந்
நகைப்புனக் கேஅல்லவோ?
அல்கலந் தும்பர்நா டளவெடுக் குஞ்சோலை
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 6

நீடுல கங்களுக்(கு) ஆதரவாய் நின்று
நித்தமாய் முத்தி வடிவாய்
நியமமுடன் முப்பத் திரண்டறம் வளர்க்கின்ற
நீமனை வியாய்இ ருந்தும்
வீடுவீ டுகடோறும் ஓடிப் புகுந்துகால்
வேசற்(று) இலச்சை யும்போய்
வெண்டுகில் அரைக்கணிய விதியற்று நிர்வாண
வேடமுங் கொண்டு கைக்கோர்
ஓடேந்தி நாடெங்கும் உள்ளந் தளர்ந்துநின்(று)
உன்மத்த னாகி அம்மா!
உன்கணவன் எங்கெங்கும் ஐயம்புகுந் தேங்கி
உழல்கின்ற தேது சொல்வாய்
ஆடுகொடி மாடமிசை மாதர்விளை யாடிவரும்
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 7

ஞானந் தழைத்துன் சொரூபத்தை அறிகின்ற
நல்லோர் இடத்தி னிற்போய்
நடுவி னிலிருந்துவந் தடிமையும் பூண்டவர்
நவிற்றும் உபதேச முட்கொண்டு
ஈனந்தனைத் தள்ளி எனதுநா னெனுமானம்
இல்லா மலேது ரத்தி
இந்திரிய வாயில்களை இறுகப்பு தைத்துநெஞ்(சு)
இருளற விளக்கேற் றியே
ஆனந்த மானவிழி அன்னமே! உன்னைஎன்
அசுத்தா மரைப்போ திலே
வைத்துவே றேகலை யற்றுமே லுற்றபர
வசமாகி அழியாத தோர்
ஆனந்த வாரிதியில் ஆழ்கின்ற தென்றுகாண்
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 8

சலதியுல கத்திற் சராசரங் களையீன்ற
தாயா கினாலெ னக்குத்
தாயல்ல வோயான்உன் மைந்த னன்றோ? எனது
சஞ்சலம் தீர்த்து நின்றன்
முலைசுரந் தொழுகுபா லூட்டிஎன் முகத்தைஉன்
முன்தானை யால்து டைத்து
மொழிகின்ற மழலைக் குகந்துகொண் டிளநிலா
முறுவல் இன் புற்றரு கில்யான்
குலவிளையாடல் கொண்டருண் மழைபொழிந்(து) அங்கை
கொட்டி வாவென்(று) அழைத்துக்
குஞ்சரமு கன்கந்தனுக்(கு) இளையன் என்றெனைக்
கூறினால் ஈனம் உண்டோ?
அலைகடலி லேதோன்று மாறாத அமுதமே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமி யே! 9



கைப்போது கொண்டுன் பதப்போது தன்னில்
கணப்போதும் அர்ச்சிக் கிலேன்
கண்போதி னாலுன் முகப்போது தன்னையான்
கண்டு தரிசனை புரிகிலேன்
முப்போதில் ஒருபோதும் என்மனப் போதிலே
முன்னிஉன் ஆல யத்தின்
முன்போது வார்தமது பின்போத நினைகிலேன்
மோசமே போய்உ ழன்றேன்
மைப்போத கத்திற்கு நிகரெனப் போதெரு
மைக்கடா மீதேறியே
மாகோர காலன் வரும்போது தமியேன்
மனங்கலங் கித்தி யங்கும்
அப்போது வந்துன் அருட்போது தந்தருள்
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 10

மிகையுந் துரத்தவெம் பிணியுந் துரத்த
வெகுளி யானதுந் துரத்த
மிடியுந் துரத்தநரை திரையும் துரத்தமிகு
வேதனை களுந்துரத்த
பகையுந் துரத்தவஞ் சனையுந் துரத்தப்
பசியென் பதுந்து ரத்தப்
பாவந் துரத்தப் பதிமோகந் துரத்தப்
பலகா ரியமுந் துரத்த
நகையுந் துரத்தஊழ் வினையுந் துரத்த
நாளும் துரத்து வெகுவாய்
நாவரண் டோடிக்கால் தளர்ந்திடும் என்னை
நமனும் துரத்து வானோ?
அகிலஉல கங்கட்கும் ஆதாரதெய்வமே!
ஆதிகட வூரின் வாழ்வே!
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி!
அருள்வாமி! அபிராமியே! 11

அபிராமியம்மை பதிகம் முற்றிற்று

உ
சிவமயம்



# கந்தர் சஷ்டி கவசம்

சஷ்டியை நோக்கச் சரவண பவனார்
சிஷ்டருக் குதவுஞ் செங்கதிர் வேலோன்
பாதமி ரண்டில் பன்மணிச் சதங்கை
கீதம் பாடக் கிண்கிணி யாட
மையல் நடஞ்செயும் மயில்வா கனனார்
கையில்வேலா லெனைக் காக்கவென் றுவந்து
வர வர வேலாயுதனார் வருக
வருக வருக மயிலோன் வருக
இந்திரன் முதலா எண்டிசை போற்ற
மந்திர வடிவேல் வருக வருக
வாசவன் மருகா வருக வருக
நேசக்குறமகள் நினைவோன் வருக
ஆறுமுகம் படைத்த ஐயா வருக
நீறிடும் வேலவன் நித்தம் வருக
சிரகிரி வேலவன் சீக்கிரம் வருக



சரவண பவனார் சடுதியில் வருக
ரஹண பவச ரரரர ரரர
ரிஹண பவச ரிரிரிரி ரிரிரி
விணபவ சரவண வீரா நமோநம
நிபவ சரவண நிறநிற நிறென
வசர ஹணபவ வருக வருக
அசுரர் குடிகெடுத்த ஐயா வருக
என்னை ஆளும் இளையோன் கையில்
பன்னிரண் டாயுதம் பாசாங் குசமும்
பரந்த விழிகள் பன்னிரண் டிலங்க
விரைந்தெனைக்காக்க வேலோன் வருக
ஐயும் கிலியும் அடைவுடன் சௌவும்
உய்யொளி சௌவும் உயிரையுங் கிலியும்
கிலியும் சௌவும் கிளரொளி ஐயும்
நிலைபெற் றென்முன் நித்தமு ஒளிரும்
சண்முகன் நீயும் தனியொளி யொவ்வும்
குண்டலி யாம்சிவ குகன்தினம் வருக
ஆறு முகமும் அணிமுடி ஆறும்
நீறிடு நெற்றியும் நீண்ட புருவமும்
பன்னிரு கண்ணும் பவளச்செவ் வாயும்
நன்னெறி நெற்றியில் நவமணிச் சுட்டியும்
ஈராறு செவியில் இலகுகுண் டலமும்
ஆறிரு திண்புயத் தழகிய மார்பில்
பல்பூ ஷணமும் பதக்கமும் தரித்து
நன்மணி பூண்ட நவரத்ன மாலையும்

முப்புரி நூலும் முத்தணி மார்பும்
செப்பழ குடைய திருவயிறு உந்தியும்
துவண்ட மருங்கில் சுடரொளிப் பட்டும்
நவரத்தினம் பதித்த நற்சீ ராவும்
இருதொடை யழகும் இணைமுழந் தாளும்
திருவடி யதனில் சிலம்பொலி முழங்க
செககண செககண செககண செகண
மொகமொக மொகமொக மொகமொக மொகென
நகநக நகநக நகநக நகென
டிகுகுண டிகுடிகு டிகுகுண டிகுண
ரரரர ரரரர ரரரர ரரர
ரிரிரிரி ரிரிரிரி ரிரிரிரி ரிரிரி
டுடுடு டுடுடு டுடுடு டுடு
டகுடகு டிகுடிகு டங்கு டிங்குகு
விந்து விந்து மயிலோன் விந்து
முந்து முந்து முருகவேள் முந்து
என்றனை யாளும் ஏரகச் செல்வ
மைந்தன் வேண்டும் வரமகிழ்ந் துதவும்
லாலா லாலா லாலா வேசமும்
லீலா லீலா லீலா விநோதனென்று
உன்திரு வடியை உறுதி யென்றெண்ணும்
என்தலை வைத்துன் இணையடி காக்க
என்னுயிர்க் குயிராம் இறைவன் காக்க
பன்னிரு விழியால் பாலனைக் காக்க
அடியேன் வதனம் அழகுவேல் காக்க



பொடிபுனை நெற்றியைப் புனிதவேல் காக்க
கதிர்வேல் இரண்டும் கண்ணினைக் காக்க
விழிசெவி யிரண்டும் வேலவர் காக்க
நாசிகள் ரண்டும் நல்வேல் காக்க
பேசிய வாய்தனைப் பெருவேல் காக்க
முப்பத் திருபல் முனைவேல் காக்க
செப்பிய நாவைச் செவ்வேல் காக்க
கன்னமி ரண்டும் கதிர்வேல் காக்க
என்னிளங் கழுத்தை இனியவேல் காக்க
மார்பை இரத்தின வடிவேல் காக்க
சேரிள முலைமார் திருவேல் காக்க
வடிவேல் இருதோள் வளம்பெறக் காக்க
பிடரிகளி ரண்டும் பெருவேல் காக்க
அழகுடன் முதுகை அருள்வேல் காக்க
பழுபதி னாறும் பருவேல் காக்க
வெற்றிவேல் வயிற்றை விளங்கவே காக்க
சிற்றிடை அழகுறச் செவ்வேல் காக்க
நாணாங் கயிற்றை நல்வேல் காக்க
ஆண்குறி யிரண்டும் அயில்வேல் காக்க
பிட்டமிரண்டும் பெருவேல் காக்க
வட்டக் குதத்தை வடிவேல் காக்க
பணைத்தொடை யிரண்டும் பருவேல் காக்க
கணைக்கால் முழந்தாள் கதிர்வேல் காக்க
ஐவிர லடியினை அருள்வேல் காக்க
கைகள் ளிரண்டும் கருணைவேல் காக்க

முன்கை யிரண்டும் முரண்வேல் காக்க
பின்கை யிரண்டும் பின்னவ ளிருக்க
நாவிற் சரஸ்வதி நற்றுணை யாக
நாபிக் கமலம் நல்வேல் காக்க
முப்பானா டியை முனைவேல் காக்க
எப்பொழு தும்மெனை எதிர்வேல் காக்க
அடியேன் வதனம் அசைவுள நேரம்
கடுகவே வந்து கனகவேல் காக்க
வரும்பகல் தன்னில் வச்சிரவேல் காக்க
அரையிருள் தன்னில் அனையவேல் காக்க
ஏமத்திற் சாமத்தில் எதிர்வேல் காக்க
தாமத நீக்கிச் சதுர்வேல் காக்க
காக்க காக்க கனகவேல் காக்க
நோக்க நோக்க நொடியி நோக்க
தாக்க தாக்க தடையறத் தாக்க
பார்க்க பார்க்க பாவம் பொடிபட
பில்லி சூனியம் பெரும்பகை யகல
வல்ல பூதம் வாலாடிகப் பேய்கள்
அல்லற் படுத்தும் அடங்கா முனியும்
பிள்ளைகள் தின்னும் புழைக்கடை முனியும்
கொள்ளிவாய்ப் பேய்களும் குறளைப் பேய்களும்
பெண்களைத் தொடரும் பிரமராக்ஷதரும்
அடியனைக் கண்டால் அலறிக் கலங்கிட
இரிசிகாட் டேரி இத்துன்ப சேனையும்
எல்லிலு மிருட்டிலும் எதிர்படும் அண்ணரும்



கனபூசை கொள்ளும் காளியோ டனைவரும்
விட்டாங் காரரும் மிகுபல பேய்களும்
தண்டியக் காரரும் சண்டா ளர்களும்
என்பெயர் சொல்லவும் இடிவிழுந் தோடிட
ஆனை யடியினில் அரும்பா வைகளும்
பூனை மயிரும் பிள்ளைக ளென்பும்
நகமு மயிரும் நீண்முடி மண்டையும்
பாவைகளுடனே பலகல சத்துடன்
மனையிற் புதைத்த வஞ்சனை தனையும்
ஒட்டிய பாவையும் ஒட்டிய செருக்கும்
காசும் பணமும் காவுடன் சோறும்
ஓதுமஞ் சனமும் ஒருவழிப் போக்கும்
அடியனைக் கண்டால் அலைந்து குலைந்திட
மாற்றார் வஞ்சகர் வந்து வணங்கிட
காலதூ தாளெனைக் கண்டாற் கலங்கிட
அஞ்சி நடுங்கிட அரண்டு புரண்டிட
வாய்விட் டலறி மதிகெட் டோடப்
படியினில் முட்டப் பாசக் கயிற்றால்
கட்டுட னங்கம் கதறிடக் கட்டு
கட்டி உருட்டு கால்கை முறியக்
கட்டு கட்டு கதறிடக் கட்டு
முட்டு முட்டு விழிகள் பிதுங்கிட
செக்கு செக்கு செதில் செதிலாக
சொக்கு சொக்கு சூர்ப்பகைச் சொக்கு
குத்து குத்து கூர்வடி வேலால்

பற்று பற்று பகலவன் தணலெரி
தணலெரி தணலெரி தணலதுவாக
விடுவிடு வேலை வெருண்டது வோடப்
புலியும் நரியும் புன்னரி நாயும்
எலியும் கரடியும் இனித்தொடர்ந் தோடத்
தேளும் பாம்பும் செய்யான் பூரான்
கடிவிட விடங்கள் கடுத்துய ரங்கம்
ஏறிய விடங்கள் எளிதினில் இறங்க
ஒளிப்புஞ் சுளுக்கும் ஒருதலை நோயும்
வாதம் சயித்தியம் வலிப்புப் பித்தம்
சூலைசயங் குன்மம் சொக்குச் சிரங்கு
குடைச்சல் சிலந்தி குடல்விப் பிரிதி
பக்கப் பிளவை படர்தொடை வாழை
கடுவன் படுவன் கைத்தாள் சிலந்தி
பற்குத் தரணை பருவரை யாப்பும்
எல்லாப் பிணியும் என்றனைக் கண்டால்
நில்லா தோட நீயெனக் கருள்வாய்
ஈரே ழுலகமும் எனக்குறவாக
ஆணும் பெண்ணும் அனைவரு மெனக்கா
மண்ணா ளரசரும் மகிழ்ந்துற வாகவும்
உன்னைத் துதிக்க உன்திரு நாமம்
சரவண பவனே சைலொளி பவனே
திரிபுர பவனே திகழொளி பவனே
பரிபுர பவனே பவமொழி பவனே
அரிதிரு மருகா அமரா பதியைக்



காத்துத் தேவர்கள் கடுஞ்சிறை விடுத்தாய்
கந்தா குகனே கதிர் வேலவனே
கார்த்திகை மைந்தா கடம்பா கடம்பனை
இடும்பனை அழித்த இனியவேல் முருகா
தணிகா சலனே சங்கரன் புதல்வா
கதிர்கா மத்துறை கதிர்வேல் முருகா
பழநிப் பதிவாழ் பால குமாரா
ஆவினன் குடிவாழ் அழகிய வேலா
செந்தின் மாமலையுறும் செங்கல்வ ராயா
சமரா புரிவாழ் சண்முகத் தரசே
காரார் குழலாள் கலைமகள் நன்றாய்
என்னா விருக்க யானுனைப் பாட
எனைத் தொடர்ந் திருக்கும் எந்தை முருகனைப்
பாடினேன் ஆடினேன் பரவச மாக
ஆடினேன் நாடினேன் ஆவினன் பூதியை
நேச முடன்யான் நெற்றியில் அணியப்
பாச வினைகள் பற்றது நீங்கி
உன்பதம் பெறவே உன்னருளாக
அன்புடன் ரஷி அன்னமும் சொன்னமும்
மெத்த மெத்தாக வேலாயுதனார்
சித்திபெற்றடியேன் சிறப்புடன் வாழ்க
வாழ்க வாழ்க மயிலோன் வாழ்க
வாழ்க வாழ்க வடிவேல் வாழ்க
வாழ்க வாழ்க மலைக்குரு வாழ்க
வாழ்க வாழ்க மலைக்குற மகளுடன்

வாழ்க வாழ்க வாரணத் துவசம்
வாழ்க வாழ்க என் வறுமைகள் நீங்க
எத்தனை குறைகள் எத்தனை பிழைகள்
எத்தனை யடியேன் எத்தனை செயினும்
பெற்றவன் னீகுரு பொறுப்ப துன்கடன்
பெற்றவள் குறமகள் பெற்றவளாமே
பிள்ளையென் றன்பாய்ப் பிரிய மளித்து
மைந்தனென் மீதுன் மனமகிழ்ந் தருளித்
தஞ்சமென் றடியார் தழைத்திட வருள்செய்
கந்தர் சஷ்டி கவசம் விரும்பிய
பாலன் தேவ ராயன் பகர்ந்ததைக்
காலையில் மாலையில் கருத்துட னாளும்
ஆசாரத்துடன் அங்கந் துலக்கி
நேச முடனொரு நினைவது வாகிக்
கந்தர் சஷ்டி கவச மிதனைச்
சிந்தை கலங்காது தியானிப் பவர்கள்
ஒருநாள் முப்பத் தாறுருக் கொண்டு
ஓதியே செபித்து உகந்து நீறணிய
அட்டதிக் குள்ளோர் அடங்கலும் வசமாய்த்
திசைமன்னர் எண்மர் சேர்ந்தங் கருளுவர்
மாற்றல ரெல்லாம் வந்து வணங்குவர்
நவகோள் மகிழ்ந்து நன்மை அளித்திடும்
நவமத னெனவும் நல்லெழில் பெறுவர்
எந்த நாளும்ஈ ரெட்டாய் வாழ்வர்
கந்தர்கை வேலாங் கவசத் தடியை



வழியாய்க் காண மெய்யாய் விளங்கும்!
விழியாற் காண வெருண்டிடும் பேய்கள்
பொல்லா தவரைப் பொடி பொடி யாக்கும்
நல்லோர் நினைவில் நடனம் புரியும்
சர்வ சத்துரு சங்கா ரத்தடி
அறிந்தென துள்ளம் அஷ்டலஷ் சுமிகளில்
வீரலட்சுமிக்கு விருந்துண வாகச்
சூரபத்மாவைத் துணித்தகை யதனால்
இருபத் தேழவர்க் குவந்தமு தளித்த
குருபரன் பழநிக் குன்றினி இருக்கும்
சின்னக் குழந்தை சேவடி போற்றி!
எனைத்தடுத் தாட்கொள என்றன துள்ளம்
மேவிய வடிவுறும் வேலவ போற்றி!
தேவர்கள் சேனா பதியே போற்றி!
குறமகள் மனமகிழ் கோவே போற்றி!
திறமிகு திவ்விய தேகா போற்றி!
இடும்பா யுதனே இடும்பா போற்றி!
கடம்பா போற்றி கந்தா போற்றி!
வெட்சி புனையும் வேளே போற்றி!
உயர்கிரி கனக சபைக்கோர் அரசே!
மயில்நட மிடுவோய் மலரடி சரணம்!
சரணம் சரணம் சரவண பவ ஓம்!
சரணம் சரணம் சண்முகா சரணம்!
வேலும் மயிலும் துணை

முற்றும்

# சகலகலாவல்லி மாலை

### குமரகுருபரர் அருளியது

வெண்டா மரைக்கன்றி நின்பதம் தாங்கவென் வெள்ளையுள்ளத்
தண்டா மரைக்குத் தகாது கொலோசக மேழுமளித்
துண்டான் உறங்க ஒழித்தான்பித் தாகவுண் டாக்கும்வண்ணம்
கண்டான் சுவைகொள் கரும்பே சகல கலாவல்லியே. 1

நாடும் பொருட்சுவை சொற்சுவை தோய்தர நாற்கவியும்
பாடும் பணியிற் பணித்தருள் வாய்பங்க யாசனத்திற்
கூடும் பசும்பொற் கொடியே கனதனக் குன்றுமைம்பாற்
காடுஞ் சுமக்குங் கரும்பே சகல கலாவல்லியே. 2

அளிக்குஞ் செழுந்தமிழ்த் தெள்ளமுதார்ந்துன் அருட்கடலிற்
குளிக்கும் படிக்கென்று கூடுங்கொ லோவுளம் கொண்டு தெள்ளித்
தெளிக்கும் பனுவற் புலவோர் கவிமழை சிந்தக்கண்டு
களிக்குங் கலாப மயிலே சகல கலாவல்லியே. 3

தூக்கும் பனுவற் துறைதோய்ந்த கல்வியுஞ் சொற்சுவைதோய்
வாக்கும் பெருகப் பணித்தருள் வாய்வட நூற்கடலும்
தேக்குஞ் செழுந்தமிழ்ச் செல்வமுந் தொண்டர்செந் நாவினின்று
காக்குங் கருணைக் கடலே சகல கலாவல்லியே. 4

பஞ்சப் பிதந்தரு செய்யபொற் பாதபங் கேருகமென்
நெஞ்சத் தடத்தல ராததென் னேநெடுந் தாட்கமலத்து
அஞ்சத் துவச முயர்த்தோன்செந் நாவு மகமும்வெள்ளைக்
கஞ்சத் தவிசொத் திருந்தாய் சகல கலாவல்லியே. 5



பண்ணும் பரதமுங் கல்வியுந் தீஞ்சொற் பனுவலும்யான்
எண்ணும் பொழுதெளி தெய்தல்நல் காயெழு தாமறையும்
விண்ணும் புவியும் புனலுங் கனலும்வெங் காலுமன்பர்
கண்ணுங் கருத்தும் நிறைந்தாய் சகல கலாவல்லியே. 6

பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனுமென்பாற்
கூட்டும் படிநின் கடைக்கணல் காயுளங் கொண்டுதொண்டர்
தீட்டுங் கலைத்தமிழ்த் தீம்பாலமுதந் தெளிக்கும் வண்ணம்
காட்டும்வெள் ளோதிமப் பேடே சகல கலாவல்லியே. 7

சொல்விற் பனமு மவதான முங்கவி சொல்லவல்ல
நல்வித்தை யுந்தந் தடிமைகொள் வாய்நளி னாசனஞ்சேர்
செல்விக் கரிதென் றொருகால முஞ்சிதையாமை நல்கும்
கல்விப் பெருஞ்செல்வப் பேறே சகல கலாவல்லியே. 8

சொற்கும் பொருட்கு முயிரா மெய்ஞ்ஞானத்தின் தோற்றமென்ன
நிற்கின்ற நின்னை நினைப்பவர் யார்நிலந் தோய்புழைக்கை
நற்குஞ் சரத்தின் பிடியோ டரசன்ன நாணநடை
கற்கும் பதாம்புயத் தாளே சகல கலாவல்லியே. 9

மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட மன்னருமென்
பண்கண் டளவிற் பணியச்செய் வாய்படைப் போன்முதலாம்
விண்கண்ட தெய்வம்பல் கோடிஉண் டேனும் விளம்பிலுன்போற்
கண்கண்ட தெய்வமுளதோ சகல கலாவல்லியே. 10

உ
சிவமயம்

# சைவசமய வழிபாடும் பயனும்

## வழிபாட்டின் வழி

மனிதனை மனிதனாக வாழ வழிப்படுத்துவது வழிபாடு. முன்னறி தெய்வங்களான அன்னையும், பிதாவும், தெய்வத்தை அறியத்தரும் குருவும், எல்லோரையும் வாழ்விக்கும் தெய்வமும் வழிபாட்டுக்கு உரியவராவர்.

**"மாதா பிதா குரு தெய்வம் - அவர்**
**மலரடி தினம் தினம் வணங்குதல் செய்வம்"**

என்று மகாகவி பாரதியார் சின்னஞ்சிறு குழந்தைகளுக்குப் பிஞ்சு மனத்தில் பதியும்படி பாட்டுச் சொல்லித் தருகின்றார். நம் குழந்தைப் பருவத்தில் எங்கள் கண்கண்ட தெய்வங்களாக எங்களுக்கு வேண்டிய எல்லாவற்றையும் செய்து தருபவர்கள் எங்கள் தாயும் தந்தையும். ஆதலால் முதலில் அவர்களை வழிபட்டுப் பழகுகின்றோம்.

வளரும்போது ஆசிரியர், எங்கள் அறியாமையை நீக்கி அறிவுதரும் கல்வியை சொல்லித் தருகின்றார். ஆதலால் வித்தியாகுருவாகிய ஆசிரியரை வழிபடுகின்றோம். அதன் பின் நாம் பெற்ற கல்வியின் பயனாக எங்கும் நிறைந்த எல்லாம் வல்ல கடவுளே எல்லாரையும் வாழவைக்க வல்லவர் என்பதை ஞானகுருவாக எங்களுக்கு வாய்க்கப்பெற்ற அருளாளர்களின் வாக்கின்படி கடவுளை வழிபடுகின்றோம்.

தாய், தந்தை, குரு எனப் படிபடிப்படியாக வளர்த்த வழிபாடு தெய்வத்தில் நிலைத்துவிடுகிறது. தெய்வத்தைத் தாய் தந்தை, குருவிடமும் கண்டு வழிபடும் பக்குவத்தையும் எமக்குத் தந்து விடுகிறது. நாம் வழிபட வழிபடத் தெய்வம் எம்மை நல்வாழ்வுக்கு வழிப்படுத்திக் கொண்டே இருக்கும். ஆதலால்



தான் உலகில் உள்ள எல்லாச் சமயத்தினரும் வழிபாடு செய்கின்றார்கள்.

## சிவ வழிபாடு

உலகத்தில் எண்ணில்லாத சமயங்கள் இருக்கின்றன. அவை கடவுளுக்கு வெவ்வேறு பெயர்களை இட்டு வெவ்வேறு வழிகளில் வழிபாடு செய்கின்றன. தமிழர்களாகிய நாம் தெய்வத்தைக் கடவுள் என்கின்றோம். எமக்கு உள்ளும் எம்மைக் கடந்தும் இருப்பது தெய்வம் என்கின்ற அரும்பெரும் உண்மையைக் கடவுள் எனும் சொல் உணர்த்துகின்றது. சைவசமயத்தில் கடவுளுக்குச் சிறப்பாகச் சிவபெருமான் எனும் பெயர் சொல்லி வழிபடுகின்றோம். சிவம் என்றால் மங்கலமானது என்பது பொருள். என்றும் எங்கும் நிறைந்த மங்கலமான பரிபூரணப் பொருள் சிவம் என அழைக்கப்படுகின்றது.

சிவசம்பந்தம் உடையதால் எமது சமயத்துக்குப் பெயர் சைவம். "சைவம் சிவத்துடன் சம்பந்தமாவது" என்பார் திருமூலர். நாம் அடையவேண்டிய மேலான கதிக்குப் பெயர் சிவகதி. இதனைத் திருமூலர் சுவாமிகள்

"சிவசிவ என்கிலர் தீவினையாளர்
சிவசிவ என்றிடத் தீவினைமாயும்
சிவசிவ என்றிடத் தேவருமாவர்
சிவசிவ என்னச் சிவகதிதானே"

எனத் தனது தோத்திரமும், சாத்திரமுமான திருமந்திரத்தில் கூறுகின்றார். எனவே நாம் சிவசிவ என்று மனதால் நினைத்து வாயால் சொல்லி உடலால் வழிபாடு செய்தால் சிவபெருமான் எம்மைச் சிவகதிக்கு வழிப்படுத்துவார். எமக்குச் சிவகதி சித்திக்கும்.

## திரிகரண வழிபாடு

ஏனைய உயிரினங்களுக்கு உடல் மட்டும்தான் உண்டு. மனம் வாக்கு இரண்டும் இல்லை. மனிதர்க்கு மட்டும் உடலுடன் இறைவன் மனத்தையும், வாக்கையும் தந்தகாரணம் என்ன

என்பதைச் சிவஞானசித்தியார் அறிவுறுத்துகின்றது. மானுடப் பிறப்பைத் தந்து அதற்கு மனமும், வாக்கும், காயம் ஆகிய உடலினையும் தந்தது திரிகரண சுத்தியுடன் இறைவனுக்குப் பணிசெய்வதற்கேயாகும். திரி என்பது மூன்று ஆகும். கரணங்கள் எனப்படுபவை மனதால் நினைத்தல், வாயால் சொல்லல், உடலால் செய்தல் எனப்படுபவை. தேவலோகத்தில் இருக்கும் தேவர்கள் கூடச் சிவகதி பெறவேண்டி இப்பூவுலகில் வந்து பிறந்து வழிபடுவார்கள். இந்தப் பெறுதற்கரிய மனிதப் பிறப்பைப் பெற்றும் இதன் அருமையை அறியாது மக்கள் வீணே உழல்கின்றார்களே என்று அறிவுறுத்துகின்றார்.

"மானுடப் பிறவிதானும் வகுத்தது மனவாக்(கு)காயம்
ஆனிடத் தைந்தும் ஆடும் அரன்பணிக்காகவன்றோ
வானிடத்தவரும் மண்மேல் வந்து அரன்தனை அர்ச்சிப்பர்
ஊன் எடுத்துழலும் ஊமர் ஒன்றையும் உணரார் அந்தோ"

நாவலர் பெருமான் "இந்தச் சரீரம் எமக்குக் கிடைத்தது நாம் இறைவனை வழிபட்டு முத்தியின்பம் பெறும் பொருட்டே யாகும்" என இதனை மிக எளிமையாக எமக்கு உணர்த்து கின்றார். "கருணையே வடிவாகிய கடவுளே எனக்குத் திரிகரண சுத்தியும், காரிய சித்தியும் அருள்வாய்" என வழிபடுவர் பெரியோர். எனவே மனம் வாக்குக் காயம் எனும் மூன்றினாலும் (திரி கரணங்களாலும்) சிவனை வழிபட்டால் சிவகதி கிடைக்கும் என்பதில் ஐயமுண்டோ.

## கடவுள் நெறி

எமது கண்ணுக்குத் தெரிகின்ற உலகப் பொருள்கள் எல்லாம் தோன்றுவதாலும், சிலகாலம் நிலைத்தலும், பின்னர் அழிந்துபோதலும் ஆகிய மாற்றங்களுக்கு உட்படுகின்றன. அனைத்துமே தோன்றி நின்று அழியும் தன்மையுடையனவாக இருக்கின்றன. இதனை இயற்கை என்கின்றோம். அப்படியானால் இந்த இயற்கையை இயக்குபவர் ஒருவர் வேண்டுமே. இயக்கப்படுவது தானே இயற்கையாகும். இதனை



"ஒருவனோடொருத்தி ஒன்றென்று
உரைத்திடும் உலகம் எல்லாம்
வருமுறை வந்து நின்று போவதுமாதலாலே
தருபவன் ஒருவர் வேண்டும்"

என்கின்றது சைவசித்தாந்தம். ஆகவே எங்கள் மனத்துக்கும், புலன்களுக்கும் எட்டாத ஒரு சக்திதான் இதனை இயக்குகின்றது. அதுவே எம்மைக் கடந்தும் எமக்குள்ளும் இருக்கும் கடவுள் எனும் இறைசக்தி.

## உள் பொருள் மூன்று

மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐம்பொறி களாலும் அவற்றை இயக்கும் மனத்தினாலும் அறியப்படக்கூடிய பௌதிகப் பொருட்களை ஆராய்வது விஞ்ஞானம். அதனை ஆராய்பவன் விஞ்ஞானி. பொறிபுலன்களால் அறியப்படாத பொருட்களும் உளவா என்பதை ஆராய்வது மெய்ஞ்ஞானம். அதை அறிபவன் மெய்ஞ்ஞானி. எமது சைவமெய்ஞ்ஞானிகள் எமது பொறிபுலன்களுக்கு அப்பாற்பட்ட என்றும் நிலையான மூன்று பொருள்கள் உண்டெனத் தமது ஞான தரிசனத்தால் அறிந்துள்ளனர். அவையே **பதி, பசு, பாசம்** எனும் முப்பொரு ள்கள் ஆகும்.

அறிவே வடிவான பொருள் பதி, அறிவித்தால் மட்டும் அறியக் கூடிய பொருள் பசு, அறிவற்ற பொருள் பாசம். மூன்றும் தோற்றமும் முடிவும் இல்லாத என்றும் உள்ள பொருள்களாகும். இவை அநாதியானவை. பதி ஒருவர், பசுக்களாகிய ஆன்மாக்கள் எண்ணில்லாதவை. இவற்றை உயிர்கள் என்போம். செம்பில் இயல்பாகவே களிம்பு இருப்பதுபோல உயிர்களிலே இயல்பாகவே பாசம் பிணைத்துள்ளது. இதனால் உயிர்கள் அறியாமையாகிய இருளில் மூழ்கியுள்ளன.

## தனு, கரண, புவண, போகம் தந்தவர்பதி

கருணையே வடிவான பரம்பொருளாகிய இறைவன் உயிர்கள் மேற்கொண்ட அளப்பரும் கருணையினாலே, பிள்ளைக்கு வந்த நோயை நீக்கத் தாய் மருந்து கொடுத்துக் காப்பதுபோல உயிர்கள் நல்வினை செய்து பாசங்களிலிருந்து விடுபடுவதற்கு வழிகாட்டுகின்றன.

உயிர்களுக்கு உபகாரமாகத் தனு, கரண, புவன போகங்களைக் கொடுக்கின்றான். தனு எனப்படுவது உடல், கரணம் எனப்படுவது உடலை இயக்கும் புலன்களாகிய அறிகருவிகளும் தொழிற்கருவிகளும். புவனம் எனப்படுவது உயிர்கள் பிறந்து வாழ்வதற்குரிய உலகம். போகம் எனப்படுவது அவரவர் செய்த வினைப்பயனை அவரவரே அனுபவிக்கும் இன்பதுன்ப நுகர்வு.

## கோயில் வழிபாடு ஏன்?

எங்கும் நிறைந்திருக்கும் இறைவன் உயிர்களுக்கு அருள்புரிவதற்கு உபகாரமாகச் சிவாலயங்களினிடமாக எழுந் தருளி இருக்கின்றான். தன் உடல் எங்கும் நிறைந்திருக்கும் பாலை பசு தன் மடியிலிருந்து தருவதுபோல இறைவன் தன்னை வழிபடுவோருக்கு, ஆலயத்திலிருந்து அருள்புரிகின்றான்.

கோயிலுக்குச் செல்வோர் நீராடித் தோய்த்துலர்ந்த ஆடை அணிந்து செல்லவேண்டும். நீராடும்போதும், ஆடையைத் தோய்க்கும்போதும் தம் புற அழுக்கை நீக்குதல் போலச் சிவ சிவ எனச் சிவ சிந்தனையுடன் தம் அக அழுக் காகிய பாசங்களையும் கழுவுதல் வேண்டும். பூசைக்கு வேண் டிய பத்திர புஷ்பங்கள் கொண்டு போதல் வேண்டும். கோயி லுக்குப் போக எண்ணிய நேரம் முதல் வழிபாடு முடிந்து வீடுவரும் வரை சிவசிந்தனையுடன் இருத்தல் வேண்டும். மனத்தை வேறெதிலும் செல்லவிடாது கோயிலைச் சிவமாகவே கருதி வழிபட வேண்டும். "ஆலயந்தானும் அரனெனத் தொழுமே" என்று நம் மெய்ஞ்ஞானிகள் சொல்லிவைத்துள்ளனர்.



## கோயில் வழிபாட்டு ஒழுங்குமுறை

- நீராடித் தோய்த்துலர்ந்த ஆடை அணிந்து, திருநீறு தரித் துக்கொண்டு பூசைப் பொருட்களோ அல்லது பூமாலையோ பூவோ கொண்டு செல்லவேண்டும்.
- கோபுரத்தைக் கண்டவுடனே சிவநாமத்தை உச்சரித்துக் கொண்டு இரு கரங்களையும் தலைமேல் குவித்து வணங்கவேண்டும்.
- கால் கை கழுவி, வாய் அலம்பிப் பூசைப் பொருட்களையும் நீரினால் சுத்தம் செய்துகொண்டு உள்ளே போதல் வேண்டும்.
- பலிபீடத்திற்கு (இப்பால்) முன்னால் ஆண்கள் அட்டாங்க நமஸ்காரமும் பெண்கள் பஞ்சாங்க நமஸ்காரமும் செய்தல் வேண்டும்.
- தலை, கை இரண்டு, செவி இரண்டு, மோவாய் புயங்கள் இரண்டு ஆகிய எட்டு உறுப்புக்கள் நிலத்தில் பொருந்தும்படி வணங்குதல் ஆண்களுக்குரிய அட்டாங்க நமஸ்காரம் ஆகும்.
- தலை, கை இரண்டு, முழந்தாள் இரண்டு என்னும் ஐந்து உறுப்புக்கள் நிலத்திலே பொருந்தும்படி வணங்குவது பெண்களுக்குரிய பஞ்சாங்க நமஸ்காரம்.
- நமஸ்காரம் ஒரு தரம் இரு தரம் பண்ணுதல் தவறு. மூன்று அல்லது ஐந்து அல்லது ஏழுதரம் பண்ண வேண்டும். வலம் வருதலும் இப்படியே.
- இரண்டு கைகளையும், மார்பிலேனும் சிரசிலேனும் குவித் துக்கொண்டு சிவநாமத்தை உச்சரித்துக் கொண்டு அல்லது திருமுறைகளை மனதுள் ஓதிக் கொண்டு கோயிலை வலம் வரவேண்டும்.
- விநாயகரை வணங்கும்போது இரண்டு கைகளையும் முட்டியாகப் பிடித்து நெற்றியிலே மூன்று முறை குட்டி வலக்காதை இடக்கையினாலும் இடக்காதை வலக்கை யினாலும் பிடித்துக் கொண்டு மூன்றுமுறை தாழ்ந்தெழுந்து வணங்கவேண்டும்.
- ஏனைய பரிவார மூர்த்திகளை, இரு கரங்களையும் தலையில் அல்லது மார்பில் குவித்து வணங்குதல் வேண்டும்.

❖ அபிஷேகம் நடைபெறும்போது வீதிவலம் வருதல் கூடாது.
❖ சுவாமிகள் தரிசனம் முடிந்தவுடன் சண்டேசுவரர் சந்நிதியில் கும்பிட்டு மூன்றுமுறை கைகொட்டிச் சிவதரிசனம் செய்த பலனைத் தருமாறு வேண்டுதல் செய்யவேண்டும்.
❖ சண்டேசுவரர் சந்நிதானத்தைக் கடத்தலும் சேலை தூலை இழுத்துப் போடுதலையும் தவிர்க்க வேண்டும்.
❖ வழிபாட்டை முடித்துக்கொண்டு கொடிக்கம்பத்துக்கு இப்பால் வடக்கு நோக்கி இருந்து இரு கண்களையும் மூடித் தியானித்துவிட்டு எழுந்து வீடேகல் வேண்டும்.
❖ சிவாச்சாரியார் திருநீறு தரும்போது இரு கைகளாலும், சிவசாரியாரைச் சிவமாக நினைந்து வணங்கி இடது கையின் மேல் வலது கையை வைத்து வாங்கி வடக்கு அல்லது கிழக்கு முகமாகத் திரும்பி அண்ணாந்து வலது கை நடுவில் மூன்றினாலும் சிவசிவ என்று சொல்லித் தரித்தல் வேண்டும்.

சைவசமயத்தின் சிறப்பு நூல்களாகிய சிவாகமங்கள் வழிபாட்டு முறையை நான்கு படிமுறைகளில் வகுத்துத் தந்துள்ளன. அவையே சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு மார்க்கங்களாகும். இதனைத் தாயுமான சுவாமிகள் -

"விரும்பும் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்பு மலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே"-என்கின்றார்.

அரும்பு மலராகி மலர் காயாகிக் காய் கனியாகிப்பயன் தருதல் போலச் சரியை வழிபாட்டில் உயர்ந்தால் கிரியை வழிபாடும், கிரியை வழிபாட்டில் உயர்ந்தால் யோக வழிபாடும், யோக வழிபாட்டில் உயர்ந்தால் ஞான வழிபாடும் சித்திக்கும்.

மலையின் உச்சியை அடைவதற்கு ஒவ்வொரு படியாகக் கடந்து செல்வது போலச் சிவகதியாகிய வாழ்வின் உச்சியை அடைவதற்கு நான்கு மார்க்கங்களும் உபகார மாகின்றன.



## சரியை வழிபாடு:

சரீரத்தினால் செய்யப்படுவதால் இது சரியை வழிபாடு எனப்படும். எசமானுக்குப் பணிவிடை செய்யும் அடிமை போலச் சிவபெருமானுக்குத் தொண்டு செய்வதால் இது தாசமார்க்கம் எனப்படும். (தாசன்-அடிமை) அப்பர் சுவாமிகள் "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்று சரியை வழிபாட்டில் வாழ்ந்து காட்டியவர். தனது தொண்டுக்குரிய கருவியாகிய உழவா ரத்தால் பணி செய்ததால் இவருக்கு உழவாரப்படையாளி எனும் சிறப்புப் பெயரே ஏற்பட்டது. நாம் எப்படிச் சரியை வழிபாடு செய்யலாம் என்பதைத் தனது ஒரு திருத்தாண்டகத்தில், மனமே இங்கேவா, நீ நிலையான சிவகதி பெறவேண்டுமானால் தினமும் விடியுமுன் கோயிலுக்குப் போய்க் கோயிலைக் கூட்டிக் கழுவித் தூய்மை செய்து, மலர் பறித்து மாலை தொடுத்துப் பூசைக்கு கொடுத்து, வேண்டிய தொண்டுகள் எல்லாம் செய்து பெருமானைப் போற்றிப் புகழ்ந்து பாடிப் பரவசமாக வணங்கு என்கிறார். இச் செய்தியை நாம் பாடிப் பரவுவதற்கு உபகாரமாகவும் தந்துள்ளார்.

"நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்நேநீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில்புக்கு
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப்புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச்
சங்கார சய போற்றி போற்றி என்றும்
அலைபுனல் சேர் செஞ்சடையெம் மாநீயென்றும்
ஆரூரா என்றென்றே அபருநில்லே."

நாமும் பாடிப்பரவிச் சரியைத் தொண்டு செய்து உய்தி பெறுவோமாக.

## கிரியை வழிபாடு

விசேட தீட்சை பெற்றுத் தம் ஆன்ம ஈடேற்றத்திற்காக, ஆன்மார்த்த பூசையும், உலக நன்மைக்காகப் பரார்த்த பூசையும் செய்து கிரியை முறைகளால் மனதை இறைவனிடம் பதியச்

செய்து வழிபடும் முறை இதுவாகும். சைவசமயத்தவர் ஏழுவயதிலேயே சமய தீட்சை பெற்று ஆசார அனுட்டான முடையோராக வாழவேண்டும். சமய தீட்சை பெற்றவரே கிரியை முதலிய எந்த மார்க்கத்திலும் வழிபாடு செய்யத் தகுதியு டையோராவர்.

கிரியை நெறிகளில் நின்று திருஞானசம்பந்தப் பெருமான் தனது கொஞ்சு தமிழால் சிவனைப்பாடி ஞானப்பாலுண்டு ஞானசம்பந்தரானவர். இந்த நெறியைச் சற்புத்திர மார்க்கம் என்பர். உத்தமமான மகனுக்கும், தந்தைக்கும் உள்ள தொடர்பு போன்றது. நாம் இறைவனை அம்மை அப்பராகக் கொண்டு அவர் தம் சற்புத்திரராக எம்மை நினைந்து விதிப்படி வழிபாடு செய்தலே இந்த நெறியாகும்.

## யோக வழிபாடு

புலன்களை அடக்கி மனதை ஒருநிலைப்படுத்தி எங்கும் நிறைந்திருக்கும் இறைவனைத் தன்னுள்ளே தியானித்து வழிபடும் நெறி இதுவாகும். சரியை கிரியை நெறிகளில் கோயில் வழிபாடு செய்து ஆன்மீக உயர்வு பெற்றுத்தன் உடலையே கோயிலாகக் கொண்டு வழிபாடு செய்வர். இதனைத் திருமூலர் சுவாமிகள் -

"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெரிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளாமணிவிளக்கே

எனத் தெளிவாகச் சொல்கின்றார் தாயுமானசுவாமிகள்"

"நெஞ்சமே கோயில், நினைவே
சுகந்தம், அன்புமருஞ்சுளதிர்"

என்பர்

இறைவனைத் தோழமை உறவுடன் தன்மனத்திலே வைத்து உரிமையுடன் பாடி யோகநெறி நின்று காட்டியவர் சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆவர். இதனைச் சகமார்க்கம் எனவும் சொல்வர்.



## ஞானவழிபாடு

சரியை கிரியை யோக வழிபாடுகளில் உயர்ந்து நின்றோர் ஞானவழிபாட்டுக்குரியர்-மாணிக்கவாசக சுவாமிகள் நின்ற இந்நெறி சன்மார்க்கநெறி எனப்படும். "நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே" எனும் முற்றும் துறந்த நிலையினர்க்கே ஞானவழிபாடு உரியது.

ஞானநெறிநின்றோர் சாயுச்சியை முத்தியடைவர். அதுவே சிவகதியாகும். சிவத்துடன் இரண்டறக் கலந்து பேரின்பத்தில் திழைத்து இன்புற்றிருப்பார். இதனை மாணிக்கவாசக சுவாமிகளே வியந்துபாடும் திருவாசகம்

"முத்திநெறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறியறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
சித்தமலம் அனுபவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவர் அச்சோவே." என்பதாகும்.

## பிறவிப்பயன்

முத்திநெறியை அறியாது பாசத்தால் கட்டுண்டு அறியாமையில் மூழ்கிக்கிடக்கும் எமக்குச் சிவபெருமான் உபகாரமாகத் தந்த தனு கரண புவன போகங்களைப் பயன்படுத்தி மனம் வாக்குக் காயம் எனும் திரிகரண சுத்தியுடன் இறைவனை வழிபட்டுச் சிவகதி பெற முயல்வோமாக. கல்வியின்பயன் கடவுளைத் தொழுதல் - பிறவியின் பயன் இறைவனை அடைதல் ஆகும்.

கற்றதனா லாய பயனென்கொல் - வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின். - குறள்

**கலாபூஷணம், சைவப்புலவர்**
**சு. செல்லத்துரை**
இளவாலை.
25.02.2008

உ

சிவமயம்

# மனித வாழ்வில் மங்கலக் கிரியைகள்

மனித வாழ்விற் குழந்தை ஒன்று பிறந்து அதன் வளர்ச்சிப் போக்கின் படிகளின் சில கட்டங்களிற் சிறப்பினவான நிலைகளைப் பார்க்கின்றோம். அந்த நிலைகளில் ஏதோ ஒரு வகையில் ஒரு கொண்டாட்டம் ஆக்கியும் விடுவோம். கொண்டாட்டம் குறிப்பிட்ட ஒருவரை வாழ்த்தவும், பலருஞ் சேர்ந்து மகிழ்ச்சியுடன் பொழுதைக் களிக்கவும் வழி செய்யும். இவை மனதுக்குச் சாந்தி தருவன. எனவே தேவைப்படுபவையும் இவைகளே,

**"மனதில் உறுதி வேண்டும்**
**வாக்கினலே இனிமை வேண்டும்**
**நினைவு நல்லது வேண்டும்"**

என்னும் பாடற் பகுதி குறிப்பிட்ட மூலத்தின் மேல் நிற்பது தெரிகின்றது. வாழ்வு ஒரு குறுகிய பொழுது. அந்தக் குறுகிய பொழுதை மகிழ்ச்சியுடையதாக்கி விடவேண்டும். அதற்கு அந்தப் பருவங்களையும் அந்தவேளை நாம் செய்ய வேண்டுவனவற்றையும் அறிந்திருக்கவேண்டியது அவசியம்.

## மங்கலக் கிரியைகளும் செயலமர்வும்

**1. குழந்தைப்பேறு:-**

நல்ல பண்புடைய குழந்தையைப் பெற்றுவிட்டால் ஒரு தம்பதியர்க்கு அதைவிட மேலான செல்வம் எதுவும் இருக்கமுடியாது. நல்ல குழந்தைப்பேறு பெற்றவர்களின் துன்பங்கள் அகலக் காரணமாகும். தந்தையென்றும் தாயென்றும் தகுதியைத் தருபவர்கள் பிள்ளைகள், குழந்தைப் பேற்றுக்கு வாய்ப்பில்லையெனில் தாய் மலடி என்ற பெரும் பெயருக்கு உரியவளாகிவிடுவாள். அதாவது மற்றையோரின் இழிவுரைக்கு ஆட்பட்டுவிடுவாள்.



பண்டை நாட்களில் வைத்தியசாலை கிடையாது. ஓலையால் வேயப்பட்ட மண்வீடுகளில் தான் குழந்தைப்பேறு நடைபெறும். கிராமப் புறத்தைச் சேர்ந்த ஒரு பெண் மருத்துவிச்சி என்னும் பெயரில் சுகாதார மருத்துவ மாதராகக் கடமை புரிவார். ஆண் குழந்தை கிடைத்திருக்கிறது என்று உள்ளே இருந்து மருத்துவிச்சி சொன்னதும் குழந்தையின் தந்தை ஓலைக் கூரையிலே தட்டி ஆரவாரஞ் செய்வார். பின் வேண்டியவர்களுக்கெல்லாம் அறிவிப்பார்கள். ஆண் குழந்தை பெற்றவர்கள் வருபவர்களுக்குக் கற்கண்டு கொடுப்பார்கள். பெண் குழந்தை பெற்றவர்கள் வருபவர்களுக்கு சர்க்கரை கொடுப்பார்கள். இப்போது சர்க்கரைக்குப் பதிலாக வேறு இனிப்புக்கள் கொடுக்கப்படுகின்றன. குழந்தைப் பேற்றுடனாகிய காலம் துடக்குடன் தொடர்புபட்ட காலமாகையால் இந்தவேளை வேறு எந்தவொரு விழாவும் நடைபெறமாட்டாது.

**2. துடக்குக்கழிவு :**

குழந்தை பிறந்து மூப்பத்தோராவது நாளன்று நடைபெறுவது. புனித நிலைமையை உண்டாக்குவதைக் கருத்தாகக் கொண்டு அந்தணர் ஒருவரின் உதவியுடன் இது செய்யப்படும். குழந்தை பிறந்துள்ள வீட்டிலுள்ளோர் அனைவரும் நீராட வேண்டும். சிவாச்சாரியார் கொடுக்கும் பஞ்சகௌவிய நீரிற் சில துளிகளை வாயிலே விட்டு உட்கொள்ளவேண்டும். வீடும், வீட்டுச் சூழலும் சாணி கரைத்த நீர், மஞ்சள் கரைத்த நீர் என்பவற்றுள் ஒன்று கொண்டு தெளித்துத் தூய்மையாக்கப்பட வேண்டும். முடிவில் பஞ்சகௌவிய நீரை எங்கும் தெளித்து

விடலாம். இந்த முப்பத்தொரு நாள்களும் அந்த வீட்டு வளாகத்தின் ஓரிடத்திலேயே குழந்தையை வைத்திருப்பர். முப்பத்தொன்றின்மேல் வீட்டு வளாகத்தின் எப் பகுதிக்கும் கொண்டு செல்ல முடியும்.

**3. பெயரிடுதல் :**

பெயரிடுதல் முப்பத்தோராவது நாளிலே நடைபெறும். முன்னை நாள் கொள்கையின்படி பேரன் அல்லது பேத்தியின் பெயரை வைப்பார்கள். பெரும்பான்மையாகத் தெய்வப் பெயர்களே ஏற்புடையனவாகும். இன்று எண் சோதிடத்தை வழிபட்டே பெயரிடுவர். உயிரெழுத்துக்களுள் ஒன்றை முதலாக வுடைய பெயர் சாலச் சிறந்ததென்பதொரு கொள்கை யுண்டு. பெயரிடுதல் தொட்டிலில் இடுவதுடன் தொடர்புடையதெனக் கொண்டு அன்றே தொட்டிலில் இட்டுத் தாய்மாமன் மாமியரால் பெயர் குழந்தையின் காதில் முதலில் ஒலிக்கப்படும்.

**4. கோயிலுக்குக் கொண்டு செல்லுதல் :**

குழந்தையைக் கொண்டு செல்லுதல் ஒரு சிறப்பான நிகழ்வாகும். குழந்தையின் தோற்றத்தின் பின் நாற்பத்தோராவது நாளில் நடைபெறுவது இது. வீட்டை விட்டு வெளியேறுங் குழந்தை முதன் முதலில் செல்வது சிவாலயத்துக்கே. வேறு எங்காவது செல்ல வேண்டுமென்றால் கோயிலுக்குச் சென்ற பின்னரே செல்லமுடியும். இந்த ஆலய தரிசனம் குலதெய்வமான கோயிலிலேயே நடைபெறும்.

**5. உணவூட்டுதல் (அன்னப்பிராசனம்) :**

முதன் முதல் அன்னத்தை உண்ணக் கொடுத்தல். ஆண் குழந்தைக்கு ஆறாம் எட்டாம் பத்தாம் மாதங்களுள் ஒன்றிலும் உணவூட்டுதல் நடைபெறலாம். வீட்டிலுள்ள வழிபடு மிடத்தில் பூரண கும்பம் வைத்துத் தீபாராதனை செய்து கிழக்கு



அல்லது வடக்கு நோக்கிக் குழந்தையை அன்னை வைத்தி ருக்க கனியும்படி ஆக்கிய சோற்றைச் சுட்டாறிய பாலுடன் சேர்த்துச் சிறிதளவில் நாவிற் பட வைக்கலாம். சிறிதளவு நெய் கலந்து பாயாசம் கொடுக்கும் முறைமையும் உண்டு. உணவூட்டும் கிரியை ஆலயங்களில் நடைபெறுவதும் உண்டு.

**6. பல்லின் தோற்றம் :**

குழந்தையின் முன் வாயில் முதன் முதலில் பல்லின் வெளிப்பாட்டைக் கண்டதும் நிகழ்வது. உடனே பல்லுக்கொழுக்கட்டை அவிப்பார்கள். வீட்டின் வழிபாட்டிடத்தில் கும்பம் வைத்துத் தீபாராதனை செய்து தூய வெள்ளைத் துணியை விரித்து வடக்காகவோ, கிழக்காகவோ பார்க்கும்படி குழந்தையை அதன் மேல் இருக்கச் செய்து தலைக்கு மேலாகவும் ஒரு வெள்ளைத் துணியைப் போட்டுத் தாய்மாமன் கொழுக்கட்டைகளைக் குழந்தையின் தலைக்கு மேலால் கொட்டுவார். எல்லாப் பக்கங்களும் சிதறி விழும் கொழுக்கட் டையை எடுத்துண்ணக் குழந்தை முயற்சிக்கலாம். நிகழ்விற் கலந்து கொண்டோர் கொழுக்கட்டைகளை எடுத்துக் குழந்தைக்குங் கொடுத்துத் தாமும் உண்டு மகிழலாம்.

**7. ஏடு தொடக்கல் :**

பண்டை நாள்களில் பிள்ளை ஐந்தாவது வயதில் தான் பாடசாலை செல்லும். அப்போதுதான் படிக்கவும் செய்யும். எனவே அந்தவேளை பாடசாலை செல்லு முன்பாக ஏடு தொடக்கப்படும். இப்பொழுது முன்பள்ளி என்று பிள்ளைகள் மூன்றாம் வயதிலேயே பாடசாலை செல்லத் தொடங்குகின்றனர். எனவே அந்தப் பருவத்துடன் ஒட்டி ஏடு தொடக்கப்படும். ஏடு தொடக்கல் வித்தியாரம்பம். முன்னை நாள்களில் கடதாசி கிடையாது. எனவே பனை ஓலைகளில் எழுதினார்கள். எழுது வதற்கு எழுத்தாணி உபயோகப்பட்டது. ஆரம்பம் மண்ணில் எழுதிப் பயின்றனர்.

ஒழுக்கசீலரான ஒரு அறிஞர் உதவி கொண்டு வித்தியாரம்பம் செய்யப்பட்டது. வீட்டிலாயின் வழிபடுமிடத்தில் பூரண கும்பம் வைத்துத் தீபாராதனை செய்தபின் கிழக்கு முகமாகவோ வடக்கு முகமாகவோ பார்த்திருந்து கற்க வழி செய்யலாம். பயன்படவுள்ள ஏடு பிள்ளையார் முன்பாக வைக்கப்படும். அப்பாவோ அல்லது மற்றொரு வயது முதிர்ந்த மங்கல வாழ்வுடையவரோ தேங்காய் உடைத்துக் கற்பூர தீபம் ஏற்ற அறிஞர் குழந்தையை வாழ்த்தி ஏட்டை எடுத்துச் சொல்லிக் கொடுத்து பின் எழுத வைப்பார். உயிரெழுத்துப் பயிற்சி மட்டும் போதியது. அரிசியில் எழுத்துப் பயிற்சி நிறைவெய்தியதும் எல்லோருக்கும் கற்கண்டு கொடுக்கப்டும்.

**8. தீட்சை :**

சைவ சமயத்தவர்க்குப் பிறக்கும் குழந்தைகள் சைவக் குழந்தைகள் என்று நாங்கள் தீர்மானிப்போம். ஓரளவிற்கு அது சரியான சிந்தனைதான். ஆனாலும் அவர்கள் சைவ அனுட்டானத்திற்கு உரியவர்களாவதற்குச் சமய தீட்சை பெற்றுத் தானாக வேண்டும். எல்லாச் சமயத்தவர்களுக்கும் இது பொதுவான ஒரு கொள்கை. சமயச் சடங்கு ஒன்று நடந்த பின்தான் அக்குழந்தை அந்தச் சமயத்தைச் சார்ந்ததாகும்.

சிலவழிபாட்டுடனாகிய சைவப் பெற்றோரின் குழந்தைகள் சிவதீட்சை பெற்றுத்தான் சைவர்களென்பதை உறுதிசெய்ய வேண்டும். அதன் பின்னர்தான் சிவனை வழிபடும் அதிகாரமும் அக்குழந்தைகளுக்கு உரியதாகும். சிவதீட்சை பெற்றவன்தான் சிவசமயி. அவன் தான் சைவன். சிவதீட்சை பெற்றவர்கள் தான் பூர்வக் கிரியைகள் அமங்கலக் கிரியைகள், சிராத்தம் என்பவற்றைச் செய்யமுடியும். தீட்சை பெற்றவர்கள் சம்பந்தப்பட்ட கிரியைகள் நடைபெறும் இடத்திற்குப் போகாதிருப்பதுவே நல்லதாகும். சிவதீட்சை பெறாதவன் பூர்வக் கிரியைகள் அமரக் கிரியைகள் செய்யக் கூடாதோ எனின்



செய்யலாம் என்றுதான் பதில் கிடைக்கும். அந்தக் கிரியையால் உரிய பயன் கிடைக்காது என்பதுதான் உண்மை. ஆகவே எல்லோரும் சிவதீட்சை பெற்றுக்கொள்ள வேண்டும்.

சிவதீட்சை பெற விரும்புவோர் சமய தீட்சை பெற்றவராய் சந்தியாவந்தனம் சமயப்பணி சிவபூசைக் கிரமம் முதலிய ஒழுகலாறுகளைக் கைக்கொள்ளும் ஒருவராய் ஆசார்யாபிஷேகம் பெற்றவராய் உள்ள ஒருவரைக் குருவாக ஏற்றுச் சமயதீட்சை பெறலாம். சிவதீட்சை பெற்றபின் குருவின் பணிப்பின்படி ஒழுங்காக வாழவேண்டும்.

**9. பூப்புப் புனித நீராட்டல் :**

மனித வாழ்வுடனாய மங்கல கருமங்களுள் சிறப்பிடம் பெறும் மூன்றில் ஒன்று பூப்புப் புனித நீராட்டலாகும். ஒரு பெண் குழந்தை பெண்மையை, கன்னிமையை அடைவது தான் அது. புஸ்பவதியாதல், சாமர்த்தியப்படல், ருதுவாதல், புத்தியறிதல், ஆளாதல் என்னுந் தொடர்களாலும் இந்தப் பூப்பெய்துதல் குறிப்பிடப்படும்.

பூப்பெய்திய பிள்ளைக்கு முழுக வார்த்தல் முதலிய கிரியைகளைத் தாய்வழி மாமன் மாமியே முன்னின்று செய்வர். மாமா மாமி அவ்வண்ணம் இல்லாதோர் மங்கல வாழ்வுடைய வேறு யாராவது செய்யலாம். உணவு கொடுப்பதில் கவனம் வேண்டும். கத்தரிப் பிஞ்சுச் சாறு கொடுக்கலாம். குடிப்பதற்காக இது தான் முதலில் கொடுக்கவேண்டும். தண்ணீர் கொடுக்கக் கூடாது. கத்தரிக்காய்ச் சாற்றுள் நல்லெண்ணெய் விட்டுக் கொடுக்கலாம். கனியும் படியாகப் பொங்கிய சாதத்தை நற்சீரகம் அரைத்துச் சமைத்த கத்தரிக்காய்க் கறியுடன் நல்லெண்ணையும் விட்டுக் கொடுக்கலாம். தண்ணீர் அவசியம் பருகவேண்டுமெனில் நற்சீரகம் அவித்த தண்ணீரை நன்றாக ஆறவைத்து ஓரளவு

கொடுக்கலாம். இரண்டாம், மூன்றாம் நாளில் சிறிதளவு கோப்பியும் கொடுக்கலாம். வேப்பந்துளியை அரைத்து உண்ணக் கொடுப்பதுண்டு. கத்தரிக்காய்ச் சாறு கத்தரிக்காய்க் கறி வேப்பந்துளிர், நற்சீரகம், மஞ்சள் என்பன சேர்த்து அரைத்துத் திரட்டிக் காலையில் நான்கு நாட்களுக்குக் கொடுக்கலாம். இந்த அரைத்த திரட்டிற் சேர்த்துள்ள பொருள்கள் கர்ப்பப் பையைத் தூய்மை செய்ய வல்லன. கழிவுப் பொருள்களை வெளியேற்ற பலத்தைக் கொடுக்கவும் வல்லன. இந்தத் திரட்டை விழுங்கக் கொடுப்பது காலையில் சூரியோதயத்தின் போது நடைபெற வேண்டும். நான்காவது நாளிலிருந்து நல்லெண் ணையிற் பொரிக்கப்பட்ட கத்தரிக்காய் நிறைவாகச் சேர்க்கப் படலாம். உழுத்தம்மா கலக்கப்பட்ட அரிசிமாப் பிட்டு, பாற்பிட்டு என்பனவும் கொடுக்கப்படலாம். கழியுங் கொடுக்கப்படலாம். நல்லெண்ணையுடன் கலந்த உணவுகள் அதிகமாகக் கொடுக் கப்படும் காரணத்தால் தண்ணீர் கொடுப்பது குறைக்கப்பட வேண்டும். பதினைந்து நாள் வரை தான் இந்த முறைமைகள் கவனத்திற் கொடுக்கப்பட வேண்டும்.

**10. திருமணம் :**

ஒத்த இயல்புடைய ஆண் மகனையும், பெண் மகளையும் இல்லறத்தில் இணைத்துவிடுதல் திருமணமாகும். அவர்கள் இருவரதும் ஒன்றுபட்ட விருப்பத்துடனேயே இது நடைபெறவேண்டும். நல்ல முகூர்த்த நேரத்தில் பெண்பிள் ளைக்குத் தாலி கட்டுதல், மாலையிடுதல் தான் இங்கே சிறப்பான கிரியைகளாகும். பெரியவர்களின் ஆசி தொடர்ந்து கிடைக்கும். திருமணத்திற்கு முன்னும் பின்னுமாக உபகிரி யைகள் பல நடைபெறுவதுண்டு. இல்லற வாழ்வில் அவை தொடர்வன.



# நந்திக்கொடியின் மகத்துவம்

அ. கனகசூரியர்

உலகிலே ஒவ்வொரு நாடும் தமது தனித்துவத்தைப் பேணும் வகையில் தனிக்கொடி அமைத்து அதனைப் பறக்கவிடுவது நீண்டகாலமாகவே நடைமுறையிலுள்ள வழக்கமாகும். தத்தம் நாடுகளில் பொலிந்து விளக்கும் வனப்பையும், வளத்தையும் சித்தரிக்கும் வகையிலான இலச்சினை பொறிக்கப்பட்டதாக அந்தந்த நாட்டுக் கொடிகள் விளங்குகின்றன. அதுவே தேசியக் கொடியாக முக்கியத்துவம் பெறுகின்றது. பண்டைக்காலத்தில் சேர, சோழ, பாண்டிய மன்னர்களும் முறையே வில், புலி, மீன் என்பனவற்றை இலச்சினையாகக் கொண்ட கொடிகளை பறக்கவிட்டு ஆட்சிபுரிந்ததாக சங்ககால இலக்கியங்கள் சான்று பகருகின்றன. இவ்வாறு நாடுகள் மட்டுமல்ல, ஒவ்வொரு மதத்தினரும் அவர்களது தனித்துவத்தையும் சிறப்பையும் பேணும் வகையில் தங்களுக்கே உரித்தான கொடிகளைப் பயன்படுத்தி வருகின்றனர். **அந்த வகையில் பாரம்பரியமிக்க சைவசமயத்தின் சின்னமாக நந்திக்கொடி விளங்குகின்றது.**

ஆதியும் அந்தமும் இல்லாத அரும்பெரும் ஜோதி சிவபெருமான். முழுமுதற் கடவுளான சிவனுக்குரிய கொடி நந்திக்கொடி என்பதால் அதுவே உலகின் முதற்கொடியாகவும் முக்கியத்துவம் பெறுகிறது. சிவனின் வாகனமும் இடபம் எனப்படும் நந்தியாகும். இது ஒரு சிவ சின்னம் என்ற வகையிலும், சைவத்தின் தனித்துவத்தை எடுத்துக் காட்டுவ தாலும், சிவனுக்குச் செலுத்தப்படும் இறைவணக்கமும், இறைய ன்பும், மதிப்பும் நந்திக்கொடிக்கும் செலுத்தப்பட்டு இந்துப் பெருமக்களால் போற்றித் துதிக்கப்படுகின்றது. "ஏற்றுயர் கொடியுடையான்" என்ற பெருமையும் சிவனுக்கு உண்டு. பன்னிரு திருமுறைப் பாடல் வரிகளில் பக்திச் சுவையுடன் இது சொல்லப்பட்டுள்ளது.

ஒரு நாட்டில் நடைபெறும் தேசிய முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்வுகளில் தேசியக் கொடி ஏற்றப்பட்டு, எவ்வாறு போற்றி மதிப்பளிக்கப்படுகின்றதோ, அதுபோல இந்துமத விழாக்களிலும், வைபவங்களிலும், நந்திக்கொடியும் ஏற்றப்படவேண்டியதன் அவசியம் இப்போது உணரப்பட்டுள்ளது மட்டுமன்றி, அவ்விதமாகவே ஏற்றப்பட்டும், போற்றப்பட்டும் வருகிறது.

நீண்டகாலமாகவே நந்திக்கொடியின் மகத்துவமும் பாரம்பரிய சிறப்புகளும் அதன் அத்தியாவசியமும் பலருக்குத் தெரியாமலிருந்து வந்தன. ஏற்கனவே இந்து கலாசார அலுவல்கள் அமைச்சும், திணைக்களமும் நந்திக்கொடிகளை பொதுமக்களுக்கு இலவசமாக வழங்கிவந்ததன் மூலம், அதன் தனித்துவம் பலராலும் அறியப்படடது. அண்மைக்காலமாக அகில இலங்கை இந்து மாமன்றத்தின் துணைத் தலைவரான திரு. சின்னத்துரை தனபாலா தனிமனித முயற்சியாக நந்திக்கொடிகளை இந்துமக்களுக்கும், ஆலயங்கள் இந்துமத நிறுவனங்கள் மற்றும் பாடசாலைகளுக்கும் இலவசமாக வழங்கிவருகிறார். நாடளாவிய ரீதியில் மட்டமுல்ல வெளிநாடுகளிலும் இவரது சேவை தொடருகிறது. இத்தனைய ஒரு சிறப்பான கைங்கரியம் பலராலும் பெரிதும் போற்றப்படுகின்றது.

அகில இலங்கை இந்து மாமன்றத்தின் 2005ஆம் ஆண்டு வருடாந்த பொதுக்கூட்டத்தின்போது நந்திக்கொடியை சகல ஆலயங்களிலும் பறக்கவிடுவதற்கான ஒழுங்குகள் செய்யப்பட வேண்டும் என்பதை தீர்மானமாக நிறைவேற்றியிருப்பதுடன், மாமன்றம் அதனை மேலும் முன்னெடுத்துச் செல்கிறது.

நமது நாட்டில் மட்டுமல்ல உலகளாவிய ரீதியில் எங்கெல்லாம் இந்துப்பெருமக்கள் வாழ்ந்து வருகின்றார்களோ, அங்கெல்லாம் நந்திக்கொடிக்கு முக்கியத்துவம் அளித்து பறக்கவிடுவது மட்டுமன்றி, தேவையான காலங்களில் ஏற்றப்படவும் வேண்டும்.

முற்று



# குலமகளுக்கு அழகு தன்கொழுநனைப் பேணுதல்

கலாநிதி மனோன்மணி சண்முகதாஸ்

பெண்களைப் பற்றிய கருத்துக்கள் காலத்திற்குக் காலம் ஆவணப்படுத்தப்பட்டுள்ளன. இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே பாடப்பட்டதாகக் கருதப்படும் சங்கப்பாடல்கள் தொடக்கம் இன்றைய உரை நடை இலக்கியம் வரை இச்செயற்பாடு தொடர்கிறது. 19ஆம் நூற்றாண்டில் உரைநடை இலக்கியம் மேலைநாட்டார் வருகையினால் சிறப்புப்பெற்றது. அவ்வேளையில் ஆங்கில மொழியும் மேலைத்தேய பண்பாடும் தமிழர் பண்பாட்டில் பெருமளவு செல்வாக்கைச் செலுத்தத் தொடங்கின. தமிழர் பண்பாடு மாற்றமுறலாயிற்று. இம்மாற்றத்தைத் தடுப்பதற்கு பலர் பெருமுயற்சி செய்துள்ளனர். ஈழத்தில் இத்தகைய முயற்சிகளில் ஈடுபட்டவர்களில் ஆறுமுக நாவலர் முன்னோடியாக விளங்குகின்றார்.

நாவலர் காலம் 1822-1879 வரையாகும். பன்னிரண்டாம் வயதில் யாழ்ப்பாணம் மத்திய கல்லூரியில் ஆங்கிலம் கற்று உத்தியோகம் பெறும் நோக்குடன் வாழ்க்கையைத் தொடங்கினார். அக்காலச் சமூகச்சூழல் அவரை அந்நிலைக்கு ஆளாக்கிற்று. பிறப்புச் சூழலும் வளர்ப்புச் சூழலும் சைவமும் தமிழுமாக இருந்தபோதும் எதிர்காலத்தை வளமுள்ளதாக்க ஆங்கிலப் பயிற்சியும் மதமாற்றமும் வேண்டப்பட்டன. பதின்நான்கு ஆண்டுக் கல்விச் சூழலில் நாவலர் சிந்தனை தெளிவு பெற்றது. “மதமாற்றம்” எனும் செயற்பாட்டின் பின்விளைவுகளை எண்ணிப் பார்த்தார். அவர் உள்ளத்தில் இயல்பாக இருந்த கடவுள் பற்றிய சிந்தனையை எல்லோரிடமும் எடுத்து இயம்பும் பணியை மேற்கொண்டார். அவரின் சிந்தனைத் தெளிவை வருமாறு கூறியுள்ளார்.

*"குழந்தைப் பருவந்தொட்டே உன் உள்ளத்தில் வசித்து வரும் தெய்வத்துக் கூடாகவே கடவுள் உனக்கு வேண்டுவதை நல்குவார். உலக விருத்திப் பொருட்டு உள்ளத்தில் வைத்திருந்த தெய்வத்தை மாற்றி மற்றொரு தெய்வத்திற்கு உள்ளத்தை இடம்செய்வது பெண்ணொருத்தி தன் கணவனை மாற்றி மற்றொருவனை மனதில் இருத்துவது போலாகும். கணவனை மாற்றிப் பழகுபவள் விலைமகள் ஆகின்றாள். அவ்வாறே தெய்வத்தை மாற்றிப் பழகுபவன் 'கடவுள் இல்லை' என்கின்ற நாஸ்திகத்துக்கே ஆளாவான். 'நாழியரிசிக்கே நாம்' என்பதாய் அவன் வாழ்க்கை பாழ்பட்டுப்போம்."*

இங்கு தம்முடைய மதமாற்றம் பற்றிய கருத்தைத் தெளிவாக்க நாவலர் காட்டும் உவமை சிந்தனையைத் தூண்டுவதாக உள்ளது. கணவனை மாற்றி இன்னொரு ஆடவனை மனத்தில் இருத்தும் பெண்போலத் தன் மத நம்பிக்கையை மாற்றுபவர் இருப்பதாக விளக்குகிறார். சைவ மதம் நிலைத்திருந்த சூழலில் கிறிஸ்தவ மதம் வருகை தந்தபோது மக்கள் உள்ளத்தில் ஏற்பட்ட மாற்றத்தை கூறவந்த நாவலர் அதனை உணர்வு பூர்வமாக விளங்க வைக்க எண்ணினார். அதனால் மக்கள் வாழ்வியலில் உறுதியாக நிற்க வேண்டிய ஒரு நிலையைச் சுட்டிக்காட்டி விளக்குகிறார். சைவசமய வாழ்வியலில் ஒழுக்கம் அடிப்படையாக அமைந்திருந்தது. குறிப்பாகக் குடும்பநிலையில் ஒழுக்கம் பெரிதும் பேணப்பட வேண்டும் என்ற கட்டுப்பாடு இருந்தது. அதிலும் சிறப்பாகப் பெண்ணுடைய ஒழுக்கம் பேணப்படவேண்டும் என்பது வரையறையாக இருந்தது. இம்மரபான சிந்தனையை நாவலர் கிறிஸ்தவ மதத்தை விரும்பி மதம் மாறிச் செல்வோரின் மனநிலையை விளக்க எடுத்தாண்டமை அவருடைய நுண்ணறிவுத் திறத்தினைப் புலப்படுத்துகின்றது.

தமிழர் வாழ்வியலில் 'திருமணம்' என்பது ஒரு புனிதமான சடங்காகக் கருதப்படுகின்றது. ஒரு ஆணும் பெண்ணும் இச்சடங்கின் மூலம் பலர் முன்னிலையில் இணைக்கப்பட்டு குடும்ப வாழ்க்கையை ஏற்றுக்கொள்கின்றனர்.



ஆண் மீது பெண்ணும் பெண் மீது ஆணும் நம்பிக்கை கொண்டு ஒழுக்கமான வாழ்வை மேற்கொள்வதாக உறுதிமொழி செய்து அதனை உள்ளத்திலும் இருத்திக்கொள்கிறார்கள். எனினும் இவ்வுறுதி மொழியை ஆண்கள் பேணாமையால் சமூகத்தில் 'பரந்தமை' என்னும் ஒழுக்கம் ஏற்படலாயிற்று. அதற்கு சமூகமும் அங்கீகாரம் வழங்கியதை பல இலக்கியச் சான்றுகள் காட்டுகின்றன. அற நீதி நூல்களும் இவ்வொழுக்கம் கடியப்பட வேண்டுமென வற்புறுத்தியுள்ளன. 'பிறர்மனை நயவாமை' என ஆணுக்கும் பெண்ணுக்கும் இவ்வொழுக்க நிலை இன்றியமை யாததெனக் குறிப்பிட்டுள்ளன.

நாவலர் வாழ்ந்த காலத்தில் மேலைத்தேயப் பண்பாடும் ஆங்கிலக் கல்வியும், கிறிஸ்தவ மதமும் பரவியதால் இவ்வொழுக்க நிலையைத் தளரச் செய்யும் வாய்ப்புக்கள் ஏற்படலாம் என்ற நிலை உருவாகியிருந்தது. . ஆண்களின் மரபான நடை, உடை, பாவனை, பேச்சு என்பன நாகரிகமாய்த் தோன்றின. அத்தோற்றம் பெண்களின் உள்ளத்து உரத்தையும் அழியச் செய்யக்கூடும். புதிய மதக்கருத்துக்களும், செயற்பாடும் ஆண்களைக் கவர்ந்தமையாலும் மரபான தொழில்நிலைகளில் வெறுப்பு ஏற்பட்டதாலும் 'உத்தியோகம் புருஷலட்சணம்' என்ற புதிய கருத்துத் தோன்றி வளர்ச்சியடைந்தமையாலும் பெண்களின் சிந்தனையிலும் உள்ளூர மாற்றம் ஏற்படுவதை நாவலர் கவனித்தார். 'கணவனை மாற்றி மற்றொருவனை மனதில் இருத்த' ஆண்களின் புதிய வேடப்புனையும் காரணமாக அமையக்கூடும். பெண்ணின் உள்ளத்தில் தன் கணவனைப் பற்றிய சிந்தனை மட்டுமே இருக்கவேண்டும் என்ற முன்னோரது வரையறையும் நாவலரது இப்புதிய சிந்தனைக்கு அணையாய் நின்றது.

இதனை நாவலருடைய 'கற்பு' என்னும் கட்டுரை மிகத் தெளிவாய் உணர்த்துகின்றது. 1949ஆம் ஆண்டு நாவலர் எழுதிய பாலபாடம் நான்காம் புத்தகத்தில் 40 கட்டுரைகள் அமைந்துள்ளன. மாணவர்களின் அறிவு நிலையான வாசிப்புக்கு உகந்த பலவிடயங்களைக் கட்டுரையாகக் கொடுத்துள்ளார். சமூக நிலையில் பேணப்படவேண்டிய பல விடயங்களைத்

தொகுத்துக்காட்டியுள்ளார். அவற்றுள் இரண்டு கட்டுரைகளில் நாவலர் ஒழுக்கப்பேணலை வற்புறுத்த எண்ணியதைப் புலப்படுத்தியுள்ளார். 'கற்பு', 'வியபிசாரம்' என்னும் இரு கட்டுரைகளும் இவ்வகையில் இன்று நாவலருடைய சமூக நோக்கையறிய உதவுகின்றன. பிறண்பாடு தமிழர் வாழ்வியலைச் சிதைக்கும் என்பதை நன்கறிந்த நாவலர் தமிழரிடையே இருந்த ஒழுக்கபிறழ்வைச் சுட்டிக்காட்ட விரும்பினார். அதனை இளந்தலைமுலைகள் அறியவேண்டிச் சிறு கட்டுரை வடிவிலே பாடப்புத்தகத்தில் இணைத்துவிட்டார். இன்று இவ்விரு கட்டுரைகளையும் மீள வாசிக்கும்போது நாவலரின் நயமான வழிகாட்டலையும் நாம் உணர முடியும்.

'வியபிசாரம்' என்பதை வருமாறு விளக்குகின்றார்.

*"வியபிசாரமாவது காமமயக்கத்தினாலே தன் மனையாளல்லாத மற்றைய பெண்களை விரும்புதல். மற்றைய பெண்கள் என்பது கன்னியரையும் பிறர் மனைவியரையும் பொதுப்பெண்களையும் குறிக்கும். பிறன் மனையாளை விரும்புவோரிடத்தே தருமமும் புகழும் சிநேகமும் பெருமையுமாகிய நான்கும் அடையாவாம். அவரிடத்தே குடிபுகுவன பாவமும், பழியும், பகையும், அச்சமுமாகிய நான்குமாம். ஒருவன் தன் மனையாளைப் பிறன் விரும்புதலை அறியும் பொழுது தன் மனம் படுந்துயரத்தைச் சிந்திப்பானாயின் தான் பிறன் மனையாளை விரும்புவானா! விரும்பானே!"*

(பாலபாடம் 4:11.16)

*"பெண்களுக்குக் கற்பாவது விவாகஞ் செய்யுமுன் பிதாமாதாக்களாலும் விவாகஞ் செய்தபின் கணவனாலும் கற்பிக்கப்பட்டபடியே நீதிவழுவாமல் ஒழுகுதலாகும். பெண்கள் இளமைப் பருவத்திலே பிதாவினாலும், யௌவனத்திலே கணவனாலும் மூப்பிலே புத்திரனாலும் காக்கத்தக்கவர். ஆகையால் ஒருபோதும் சுவாதீனரல்லர்." என நாவலர் குறிப்பிட்டுள்ளார்.*

(பாலபாடம் 4:4.97)

நாவலர் காலத்தில் பெண்களின் நிலைமையும் இக்கட்டுரையில் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளார்.



பெண்களுக்கு அறிவூட்டல் பெற்றோராலும், கணவனாலும் நடைபெற்றது. அவளுக்கு ஆணைப்போலக் குருகுலக் கல்விக்கு வாய்ப்பிருக்கவில்லை. அதனால் அவர்களால் சுயமாக இயங்கமுடியவில்லை. கணவனும், புதல்வனும் இல்லாத மனைவியை அவளுடைய கணவருடைய பக்கத்தாரே பராமரிப்பர். அவர்கள் இல்லாதபோது அவளுடைய தாயின் பக்கத்தார் பராமரிப்பார். தகப்பன், கணவன், பிள்ளைகள் இல்லாமல் தனித்திருக்க விரும்பும் பெண் பிறந்த குலம், புகுந்த குலம் இரண்டுக்கும் வசையை உண்டாக்கிவிடுவார் என்று கருதப்பட்டது. இதனால் பெற்றோர் பெண்குழந்தைகளின் வளர்ப்பில் தனிக்கவனம் செலுத்தினர். பெண்களுக்குரிய தருமங்களெல்லாவற்றுள்ளும் முக்கிய தருமம் 'பதிவிரதம்' எனக் கருதப்பட்டது. "குலமகட்கழகு தன் கொழுநனைப் பேணுதல்" என்ற பெரியோர் இலக்கையே பெண்களின் கற்பித்தலின் முழுநோக்காக இருந்தது.

பெண்களின் சேவை வீட்டு நிலையிலே வரையறை செய்யப்பட்டிருந்தது என்பதைக் கட்டுரையில் தெளிவுபடுத்தியுள்ளார். மேலைநாட்டார் வருகையால் பாடசாலைக் கற்றல் முறைமை தோன்றியது. பெண்கல்விக்கும் வழி செய்யப்பட்டது. ஆனால் பாடசாலைக் கல்வியை விட வீட்டுக் கல்விப் பயிற்சி பெண்களுக்கு இன்றியமையாதது என்ற கருத்து வலுப்பெற்றிருந்தது. வீடு என்பது மூன்று தலைமுறையினர் ஒருங்கிணைந்து வாழும் பெரும் பொறுப்பு வழங்கப்பட்டிருந்தது. குழந்தை, கன்னி, மனைவி, தாய், முதுமகள் என்ற பெண்களின் படிமுறை வளர்ச்சி நிலைகள் பண்பாட்டுநிலையில் பல நடைமுறைகளோடு இணைந்திருந்தன. பெண் இலக்கியங்களில் மனைவி, இல்லாள் என்ற சொற்களால் பெருமைப்படுத்தப் பட்டிருந்தாள். அதற்கு முக்கிய தகுதிப்பாடாகக் 'கற்பு' கருதப்பட்டது. அறநீதி நூல்களும், காவியங்களும் இத்தகுதிப்பாட்டை ஆவணப்படுத்தியுள்ளன. புராண இதிகாசக் கதைகளிலும் கற்பு போற்றப்பட்டிருந்தது.

எனவே நாவலர் 'கற்பு' பற்றி கட்டுரை எழுதும்போது இவற்றையெல்லாம் மனங்கொண்டு எழுதியுள்ளார். பெண் 'மனைவி' என்ற நிலையில் செய்யவேண்டிய நாளாந்தக்

கடமைகளைச் செய்ய வேண்டிய முறைமையையும் விளக்கியுள்ளார். பெண்களுக்குரிய இக்கடமைகளைச் செய்வதற்குரிய பயிற்சியைப் பெற்றோர் அளிக்க வேண்டுமென்பதை வருமாறு கூறியுள்ளார்.

*"பிதாமாதாக்கள் பெண்ணுக்குச் சிறுபிராயத்திலேயே கடவுளுடைய குணமகிமைகளையும் புண்ணிய பாவங்களையும் சுவர்க்க நரக பலன்களையும் கடவுளை வழிபடு முறைமையையும் கற்பித்து வீட்டு வேலைகளைப் பழக்கல் வேண்டும்."*

(பாலபாடம் 4:98)

கூட்டுக்குடும்ப வாழ்வில் பெண்கள் இவற்றைப் பயில்வதும் எளிதாகவே இருந்தது. ஒழுங்கு, செம்மை, தூய்மை, பணிவு, அடக்கம், செயல்திறன், வழிபாடு என்னும் கற்கைநெறிகள் வீட்டிலேயே நடைபெற்றன. பெண்ணின் பாரிய கடமை பிறிதொரு குடும்பத்தைப் பராமரிப்பதே என உணர்த்தப்பட்டது. 'இல்லாள்' என்ற நிலையில் பெண்ணின் நிர்வாகத்திறன் முக்கிய தமைமையாகக் கருதப்பட்டது. மனையின் தலைமைப் பொறுப்பை ஏற்கும் 'மனைவி' என்ற தகுதிப்பாட்டிற்கு பெற்றோரின் கற்பித்தல் மூலம் பெற்ற அறிவே அடித்தளமாக அமைந்தது.

நாவலர் பெண்களின் கல்வி வீட்டுக் கல்வியாக இருப்பதே நல்லதெனக் கருதியது அக்காலத்திற்குப் பொருத்தமாயிருந்தது. பெண்ணின் குணப்பண்புகளில் 'பொறுமை' சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. 'பெண்டிர்க் கழகெதிர் பேசாதிருத்தல்' என்ற ஆன்றோர் வாக்கு இக்கருத்தை அணிசெய்து நிற்கிறது.

மனைவி இத்தகைய கற்புநிலையிலிருந்து தவறினால் குலங்கெடும். அதனால் யாவுமே கெடும். இதனை மனங் கொண்ட 'கற்பு' என்னும் ஒழுக்கநெறி பெண்ணுக்குச் சிறப்பான தகைமையாகக் கொள்ளப்பட்டது.



*"மனைவியானவள் தனக்கு ஈசுரசங்கற்பத்தினால் வாய்த்த கணவன் அழகில்லாதவனாயினும் நற்குணமில்லா தவனாயினும், வியாதியாளனாயினும், வயோதிபனாயினும் அவனைச் சிறிதும் அவமதியாது நன்கு மதித்து வழிபடல் வேண்டும். இயன்ற மட்டும் தன் கணவனுக்குக் கோபம் பிறவா வண்ணம் நடக்கவேண்டும். ஒருபோது கோபம் பிறந்தால் அதனைப் பொறுத்துக் கொண்டு முகமலர்ச்சி காட்டி இன் சொற்களைச் சொல்லி அதனைத் தணித்தல் வேண்டும். ஒருபோது கணவன் அநீதியாகக் கோபித்துக் கண்டித்தாலும் தானும் கோபித்து எதிர்வாதத்தை பேசாது மௌனமாயிருந்து இதமேபேசி அக்கோபத்தை ஆற்றல் வேண்டும்."*

(பாலபாடம் 4:ப:100)

மனைவி என்ற நிலையில் ஆணின் பலவீனங்களை அறிந்து அவன் தீயநெறியில் செல்லாது நன்னெறிப்படுத்த வேண்டியது பெண்ணின் பொறுப்பாகும். அதற்கு அவளது கற்பு நிலையே துணையாக நிற்கும். இது நாவலரது தெளிவான கருத்தாகும்.

ஆணும் பெண்ணுமான இளந்தலைமுறையின் ஒழுக்கச் சீர்கேட்டைக் களைவதற்கு மேலைத்தேய வணிகவயப்பட்ட அறிவுரைகளை விடுத்து நமது மரபு நிலையான பயிற்றல் முறையை நாவலர் வழிநின்று பாடநூல்களில் ஆற்றுவதே சாலச்சிறந்தது.

முற்று

**நன்றி**
**இந்து ஒளி சுடர்-1**

# ஆத்திசூடி

## நூல்

### அறஞ் செய விரும்பு

-1

அறம் - தர்மம் செய - செய்வதற்கு விரும்பு - ஆசை கொள்.
நற்காரியங்களைச் செய்வதற்கு ஆசைப்படவேண்டும்.

### ஆறுவது சினம்

-2

ஆறுவது - தணிக்க வேண்டுவது: சினம் - கோபம்
கோபத்தைத் தணியச் செய்ய வேண்டும்.

### இயல்வது கரவேல்

-3

இயல்வது - இயன்றதை: கரவேல் - செய்யாமல் மறைத்து வைக்கக்கூடாது.
இயன்றதை ஒளிக்காமல் செய்யவேண்டும்.

### ஈவது விலக்கேல்

-4

ஈவது - உதவிசெய்வதை: விலக்கேல் - தடுக்காதே
பிறருக்கு உதவி செய்வதைத் தடுக்கக்கூடாது.

### உடையது விளம்பேல்

-5

உடையது - உன்னிடம் இருக்கும் நன்மை தீமைகளை: விளம்பேல் - வெளியில் சொல்லாதே.
உன்னிடம் இருக்கும் நன்மைதீமைகளை பிறரிடம் கூறாதே.

### ஊக்கமது கைவிடேல்

-6

ஊக்கம் - துணிவை: கைவிடேல் - கைவிடக்கூடாது.
செயலில் ஈடுபடும் பொழுது தடங்கல் ஏற்படுமானால் அதைக் கண்டு தைரியத்தைக் கைவிடக்கூடாது.



### எண் எழுத்து இகழேல்

-7

எண் - கணக்குக்கு ஆதாரமான எண்ணையும் எழுத்து - இலக்கியத்துக்கு ஆதாரமான எழுத்தையும்: இகழேல் -ஸ்ரீ குறைவாக எண்ணக்கூடாது.

### ஏற்பது இகழ்ச்சி

-8

ஏற்பது - பிறரிடம் சென்று யாசிப்பது: இகழ்ச்சி - இழிவு
பிறரிடம் போய் யாசிப்பது இழிவாகும்.

### ஐயம் இட்டு உண்

-9

ஐயம் - பிச்சை கேட்பவர்களுக்கு: இட்டு - உணவு அளித்து: உண் - நீ சாப்பிட வேண்டும்.
பிச்சை கேட்பவர்களுக்கு உணவு கொடுத்த பின்னர் சாப்பிட வேண்டும்.

### ஒப்புரவு ஒழுகு

-10

ஒப்புரவு - உலக அனுபவத்தைத் தெரிந்து: ஒழுகு - நடந்து கொள்.
உலக அனுபவத்தை அறிந்து அதற்கேற்ப நடந்துகொள்.

### ஓதுவது ஒழியேல்

-11

ஓதுவது - படிப்பதை: ஒழியேல் - விட்டுவிடாதே
படிப்பதை விட்டவிடக் கூடாது.

### ஔவியம் பேசேல்

-12

ஔவியம் - பொறாமை: பேசேல் - பேசக்கூடாது.
பொறாமைக் குணத்தோடு சொல்லக் கூடாது.

# கொன்றை வேந்தன்

## கடவுள் வாழ்த்து

**கொன்றை வேந்தன் செல்வன் அடியினை**
**என்றும் ஏந்தித் தொழுவோம் யாமே**

கொன்றை வேந்தன் - கொன்றைப் பூமாலை யணிந்த சிவ பெருமானின் செல்வன் - குமாரராகிய விநாகக் கடவுளின், அடியினை - இரு பாதங்களையும், யாம் - நாம், ஏத்தி, தொழுவோம் - வணங்குவோம்.

கொன்றை மாலையணிந்த சிவபெருமானின் திருக்குமாரரான விநாயகக் கடவுளின் இரு பாதங்களையும் வணங்குவோம்.

**அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்**

-1

அன்னையும் - தாயும், பிதாவும் - தந்தையும், முன் அறி- முன்னதாக அறியப்பட்ட, தெய்வம் - தெய்வங்களாவார்கள்.

**ஆலயம் தொழுவது சாலவும் நன்று**

-2

ஆலயம் - கோயிலுக்குச் சென்று, தொழுவது - கடவுளை வணங்குவது, சாலவும் - மிகவும் நன்று நல்லது.
(கரு) கோயிலுக்குச் சென்று கடவுளை வணங்குவது மிகவும் நல்லது.

**இல்லற மல்லது நல்ல றமன்று**

-3

இல்லறம் - (மனைவியோடு கூடி நடத்தும்) இல்லறமானது, நல்லறம் - நல்ல அறமாகும், அல்லது - அதுவல்லாத வாழ்வானது, அன்று - நல்ல அறமன்று.
(கரு) மனையாளோடு நடத்தும் இல்லறமே நல்லது.



**ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்**

-4

ஈயார் - பிறருக்குச் சிறிதும் கொடாதவருடைய, தேட்டை - செல்வத்தை, தீயார் - (கள்வர் முதலிய) கொடியவர்கள், கொள்வர் - அபகரித்துக் கொள்வர்.
(கரு) வறியவர்கட்குக் கொடாதவர் செல்வத்தை, கள்வர் போன்ற தீயோர் பறித்துச் சென்றுவிடுவர்.

**உண்டி சுருங்குதல் பெண்டிர்க் கழகு**

-5

உண்டி - உணவை சுருங்குதல் - குறைத்தல், பெண்டிர்க்கு பெண்களுக்கு, அழகு - அழகாகும்.
(கரு) பேருண்டியை விரும்பாது மிதமாக உண்பது பெண்களுக்கு அழகு தரும்.

**ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்**

-6

ஊருடன் - ஊராருடன், பகைக்கின் -விரோதித்துக் கொண்டால் வேருடன் - (அவன்) தன் வம்சத்துடன், கெடும் - அழிவான்.
(கரு) ஒருவன் தன் ஊர்மக்களைப் பகைத்துக் கொண்டால் குடும்பத்தோடு அழிந்து போவான்.

**எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்.**

-7

எண்ணும் - கணித நூலும், எழுத்தும் - இலக்கண நூலும், கண்என - (மனிதருக்கு) இரு கண்கள் என்று சொல்லப்படும்.
(கரு) கணிதமும், இலக்கணமும் மனிதர்க்கு இரு கண்கள் போன்றவை.

**ஏவா மக்கள் மூவா மருந்து**

-8

ஏவா - ஏவுதற்கு முன்னரே குறிப்பறிந்து செய்யும், மக்கள் - பிள்ளைகள், மூவா மருந்து - (பெற்றவர்கட்கு) தேவாமிர்தம் போன்றவராவர்.

(கரு) தாய் தந்தையர் கட்டளையிடுமுன், குறிப்பறிந்து செய்கின்ற பிள்ளைகள் அவர்கட்குத் தேவாமிர்தம் போன்றவர்.

**ஐயம் புகினுஞ் செய்வன செய்**

-9

ஐயம் பகினும் - பிச்சை எடுத்தாலும் செய்வன - செய்யத்தக்க நல்லவற்றைச் செய் - (விடாது) செய்.

**ஒருவனைப் பற்றி ஓரகத்திரு**

-10

ஒருவனை - தக்கார் ஒருவரை பற்றி - துணையாகப் பற்றிக் கொண்டு, ஓரகத்து - ஓரிடத்தில், இரு - நிலைத்திரு.
(கரு) நற்குணமுடைய ஒருவரைத் துணையாகப் பற்றிக் கொண்டு ஒரிடத்தில் நிறைத்து வாழ்ந்திரு.

**ஓதலின் நன்றே வேதியர்க்கு ஒழுக்கம்**

-11

வேதியர்க்கு - பிராமணர்க்கு, ஒழுக்கம் - உயர்ந்த ஒழுக்கமானது, ஓதலின் - வேதம் ஓதுவதைவிட, நன்றே - நல்லது.
(கரு) அந்தணர்க்கு, வேதம் ஓதுவதை விட ஒழுக்கமே சிறந்ததாகும்.

**ஔவியம் பேசுதல் ஆக்கத்திற்கு அழிவு**

-12

ஔவியம் - பொறாமையான வார்த்தைகளை பேசுதல் - ஒருவன் பேசுவது, ஆக்கத்திற்கு - அவனுடைய செல்வத்திற்கு, அழிவு - அழிவைத் தரும்.
(கரு) ஒருவன் பொறாமை பேசினால், அதுவே அவனுடைய செல்வத்திற்கு அழிவைத் தரும்.



# இந்துமதம் காட்டும் விஞ்ஞானம்

“அன்பு” என்ற சொல்லினால் இறுகப் பிணைத்து எல்லோரையும் அகன்ற அதன் சிறகினுக்குள் அரவணைத்து நிற்கின்ற மதம் இந்துமதம். “அண்டம் முதல் பிண்டம் வரை” குவிந்துள்ள சாதனைகளையும், கைங்கரியங்களையும், கொண்ட விஞ்ஞானம். இந்துமதத்திடமே! சரணாகதியாகி யுள்ளது என்பதை விஞ்ஞானிகளே! ஒப்புக்கொண்டதன் பின் நாம் எக்கருத்துக்களையும் கூறத் தேவையில்லை.

ஐந்தாம் வேதம் என்று போற்றப்படுகின்ற மகாபாரதத்தை வியாசர் சொல்ல விநாயகர் எழுதினார் எனக்காணுகின்றோம். வியாசர் தான் பாரதத்தை இயற்றினார் என்பதற்கு என்ன ஆதாரம்? விநாயகர் எழுதினார் என்றால் விநாயகர் உண்டோ? என்றெல்லாம் கேள்விகள் கேட்பவர்கள் இருக்கின்றார்கள். மகாபாரதத்தில் உள்ள பலவிடயங்களுக்கு ஆதாரம் காட்டப்போவதில்லை. ஆதாரம் இல்லை “அப்படியே தான் நடந்தது” என்ற நம்பிக்கை உடையவர்கள் ஏற்கலாம். அப்படி நடக்கவில்லை என்று நம்பிக்கையில்லா தவர்கள் நிராகரிக்கலாம். அப்படியே நடந்தது என்பதற்கு எப்படி ஆதாரம் காட்டமுடியாதோ, அதேபோல், அப்படி நடக்கவே இல்லை என்பதற்கும் ஆதாரம் காட்ட முடியாது.

சரித்திர காலம் என்று நாம் நம்புகின்ற காலங்களிலேயே நடந்ததாகக் கூறப்படும் நிகழ்ச்சிகள் பற்றி ஆயிரம் கேள்விகள் கேட்கமுடியும் எனும்போது அதற்கு முற்பட்ட புராண இதிகாசங்களில் இலட்சக்கணக்கான கேள்வி களை கேட்க முடியும். அதற்குப் பெரிய சாமர்த்தியமோ, அறிவோ தேவையில்லை. சொல்லப்போனால் புராண இதிகாசங்களில் வலிந்து கூறுகின்ற சாமர்த்திய வேலையில்லை. ஏற்கிறார்களோ? மறுக்கிறார்களோ? அறிந்ததைச் சொல்லுவோம் என்ற யதார்த்த முறையே காணப்படுகிறது.

1. பிரம்மாஸ்திரப் பிரயோகம் செய்யப்பட்டால் ஒரு பெரிய நிலப்பரப்பே அழிவுக்குள்ளாகும் என்றும், பன்னிரண்டு ஆண்டுகளுக்கு அங்கே ஒரு புல் பூண்டோ முளைக்காது என்றும் பாரதத்தில் வர்ணிக்கப்படுகின்றது. அது நம்பமுடியாதது தான். ஆனால் இன்று அணுஆயு தங்களின் விளைவு இதுதானே! அன்று யப்பான் நகரங்கள் மீது பாரிய அணுகுண்டுகள் இடப்பட்டது. அதன் விளைவை இன்றும் நாம் கேட்டுக்கொண்டி ருக்கின்றோம். மகாபாரதம் கற்பனைக் கதையாக இருந்தால், இன்றைய விஞ்ஞான சாதனையை அன்று எப்படி ஒருவர் எழுதினார்.

2. அபிமன்ய தாயின் வயிற்றில் இருக்கும்போது வியூகத்தின் உள்ளே நுளையும் வழியைச் சொல்லக் கேட்டுத் தெரிந்துகொண்டான் என்று வருகிறது. இது நம்பமுடியா ததுதான். ஏனெனில் ஒரு சிறுவன் பாடசாலையில் படிக்க ஆரம்பிக்கும்போதே முடியாத அலுவலை, கருப்பையில் இருக்கும்போது செயற்படுத்துவது எவ்வளவு முட்டாள்தனம் என்பது புரிகிறது. அதைத் தான் இற்றை வரை நாம் நம்பினோம். ஆனால் இன்று யப்பான் முதலிய அபிவிருத்தியடைந்த நாடுகளில் என்ன நடக்கிறது. குழந்தை தாயின் வயிற்றில் இருக்கும்போதே அதற்குப் பாடம் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தால், அக்குழந்தை பிறந்தவுடன் அந்தப் பாடங்களில் விரைவில் நிபுணத்துவம் பெறுகிறது என கண்டுபிடித்திருக்கி ன்றார்கள். நடைமுறையில் இவ்வழி கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. பாரதம் வெற்றுக்கதையாயின் ஏன் இவ்வாறு மிகப் பெரிய வைத்திய ஆலோசணை இதில் ஏற்பட்டது.

3. பிண்டம் குடத்தில் இடப்பட்டது. அது பிறகு குழந்தையாக உருவெடுத்தது. இது பாரதத்தில் வருகின்ற விடயம்.



நம்பமுடியாதது தான். ஆனால் இன்று டெஸ்ட் ட்யூப் பேபிகளை நம்புகிறோமே! அன்று குடப்பேபி இருந்ததோ என்னவோ? நாம் என்ன கண்டோம். ஆனால் இன்றைய விஞ்ஞானம் காட்டி நிற்பதை அன்று மகாபாரதம் எப்படிக் கூறியிருக்க முடியும்.

4. ஆயுர் வேதத்தில் சரகர் சுக்குதர் முதலானவர்களின் கிரந்தங்களில் இப்போதைய வைத்தியர்கள் அதிசயிக்கும் வண்ணம் மருத்துவ முறைகளைக் கூறியிருக்கின்றனர். மேலும் அதர்வண வேதத்தில் யுத்தத்தில் உண்டாகும். பலவிதமான காயங்களை குணப்படுத்தும் மூலிகைகள் சிகிச்சை முறை சொல்லியிருப்பதை உணரமுடிகிறது.

5. இந்தியாவில் ஆவடையார் கோவிலில் கொடுங்கையில் பாறாங்கல்லை ஒரு காகிதத்தின் அளவுக்கு மெல்லியதாக இளைத்திருக்கின்றார்கள். திருவீழி மலையில் வெளவால் ஒட்டிய மண்டபத்தின் பிரமாண் டமான வளைவை எந்த ஆதாரத்தில் கட்டினர் என இன்றைய எஞ்ஜினியரிங் நிபுணர்கள் வியக்கின்றார்கள்.

6. தமிழில் பதினெண் சித்தர்கள் பாடலில் இருக்கின்ற வைத்திய நுணுக்கங்கள் கொஞ்ச நஞ்சமல்ல.

7. வான நூலில் எமக்கு இருந்த பாண்டித்தியத்தினால்தான் எத்தனை ஆயிரம் வருடங்களாக அமாவாசை கிரகணம் கொஞ்சம் கூடத் தப்பாமல் கணிக்க முடிகிறது.

8. ஸமராங்கனை சூத்திரம் என்ற நூலில் போஜராஜன் தனது நூலில் பலவிதமான மெஷின்கள் செய்யும் முறையும், ஆகாய விமானத்தைப் பற்றிய விடயங்களும் தொகுக்கப்பட்டுள்ளது. போஜராஜன் விமானம் பற்றிக் கூறும்போது நடைமுறையில் விமானம் செய்யும் வழியை

நான் சொல்லாததால் எனக்குத் தெரியாது என்று நினைத்துக்கொள்ளக் கூடாது. நடைமுறையைச் சொல்லி இந்த விமானம் செய்யப்பட்டால் மக்களின் சௌகரியத்தை விட அசௌகரியமே அதிகமாகிவிடும் என்றே சொல்லவில்லை எனக் குறிப்பிடுகின்றார்.

இன்று விஞ்ஞானம் மூலம் நடக்கிறது என்று எல்லோரும் நம்புகின்றோம். ஆனால் அன்று மந்திரங்கள் மூலம் நடந்தது என்று எழுதி வைத்திருக்கிறார்களே! எப்படி நம்புவது. ஏதோ நாம் விஞ்ஞானத்தை புரிந்து கொண்டது போல பேசுவது சரியில்லை. அணுஆயுதங்களில் அடங்கி இருக்கும் டெக்னிக் எமக்கு புரிந்துகொண்டமையாலோ அது உண்மை என்று நம்புகின்றோம். இன்றைய விஞ்ஞானம் எப்படி பலகோடி மக்களுக்கு புரியவில் லையோ, அதே போல் அன்றைய மந்திரமும் புரியவி ல்லை. விஞ்ஞானத்தால் இயலும் என்று விஞ்ஞானிகள் கூறுவதை ஏற்பதுபோல மநத்திர சக்தியால் முடியும் என்பதையும் நாம் புரிய வேண்டும்.

இன்று மேல் நாட்டு விஞ்ஞானிகள் பலரும் வேதாந்த த்தின் பக்கமும் நம்முடைய பக்தி மார்க்கத்தின் பக்கமும் வர ஆரம்பித்திருக்கின்றார்கள். ஆனால் நாமோ மற்ற நாட்டவர்கள் அடைகின்ற இரண்டாம் கெட்ட நாகரிகத்திற்கு ஓடுகின்றோம். மேல் நாட்டவர் இரும்பு யுகத்தில் இருந்து தங்க யுகத்திற்கு வருகின்றனர். ஆனால் நாமோ தங்கத்தில் இருந்து இரும்பை நோக்கி ஓடுகின்றோம். அதாவது நிறைவிலிருந்து குறைவை நோக்கி ஓடிக்கொண்டிருக்கின்றோம்.

**சைவப்புலவர், பண்டிதர்**
**தொகுப்பு : S. P. சாந்தகுமார்**



# இந்துப் பண்பாட்டு விழுமியங்கள்

இறைவனோடு மனிதன் ஏற்படுத்திக்கொள்ளும் இடைவிடாத தொடர்புதான் சமயவாழ்விற்கு அடிப்படை. இத்தகைய வாழ்க்கை முறைக்கும் மனிதனுக்கும் தேவையான சில பண்புகளை இலக்கியங்கள் உணர்த்தி நிற்கின்றன. மனித விழுமியத்தைக் கடைப்பிடிக்கும் ஓர் தனி மனிதனால் ஓர் சமுதாயமே நலம்பெற்று விடுகின்றது. பண்பாடுதான் மனித விழுமியங்கள். இவை பல்வேறு பரிமானங்களைக் கொண்டவை.

பண்பாடு என்ற சொல் பண்படுத்தல் என்ற சொல்லிலிருந்து பிறந்தது. இதன்பொருள் செம்மைப்படுத்தல்.

“பண்பெனப்படுவது பாடறிந்தொழுகுதல்” என்று கலித்தொகை நூல் இயம்புகிறது. “பாடு” எனும் சொல்லிற்கு உலக ஒழுக்கம், முறைமை, பெருமை என்ற பொருள் கொள்ளப்படுகிறது. சிறந்த சீரிய உயர்ந்த உன்னத முறையில் வாழ்க்கையில் ஒழுகவே மனித விழுமியங்கள். இந்துப் பண்பாட்டு நோக்கில் மனித விழுமியங்களில் இந்துப் பண்பாட்டாற் பேணப்பட்டு வந்துள்ளன. இந்துப் பண்பாட்டு நோக்கில் மனித விழுமியங்களில் முதன்மையானதும், அடிப்படையானதும் ஒன்றே ஒன்று தான். அதுதான் “அன்பு” இந்த அன்பு நெறியை இறைவனாகக் கொண்டது சைவநெறி என்பதைத் திருமூலரின் திருமந்திரத்தில் “அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்” என்ற பாடல் எமக்கு புலப்படுத்துகின்றது. அவ்வாறிருக்க இன்று விழுமியங்கள் பற்றிப் பரவலாகப் பேசப்பட்டு வருகின்றது. நாடுகளின் தலைவர்கள், சமயத் தலைவர்கள், சமூகத் தலைவர்கள், கல்விமான்கள் தொடக்கம் சாதாரண குடிமக்கள் வரை மனித விழுமியங்கள் பற்றியும் மனித மேம்பாடு பற்றியும் நிறையப் பேசியும், எழுதியும் வருகின்றார்கள். தற்காலத்தில் ஏற்பட்டுள்ள பல்வேறு

பிரச்சினைகளுக்கும், மனித சமுதாயத்தைப் பற்றியுள்ள சகல பீடைகளுக்கும், தொல்லைகளுக்கும் அடிப்படைக் காரணமாவது மக்கள் மனித விழுமியங்களையும் ஒழுக்கப் பண்புகளையும் வாழ்க்கையிற் கடைப்பிடிக்கத் தவறியமையே ஆகும்.

மக்கள் வாழ்வில் அமைதி, அடக்கம், திருப்தி, சாந்தி, சமாதானம் நல்லொழுக்கம் என்பன காணப்படும் போதுதான் வாழ்க்கை மகிழ்ச்சி நிறைந்ததாகவும் இன்பம் பொங்குவதாகவும் அமையும். ஆனால், இந்நிலைமை மிக அரிதாகவே சமுதாயத்தில் உள்ளது. எத்துணைச் செல்வங்கள் இருப்பினும் மனத்திருப்தியும், மன அமைதியும் இல்லாத பட்சத்தில் அச்செல்வங்களினால் ஏது பயன்!

விழுமியங்கள் நிரந்தரத் தன்மையும் மாறும் தன்மையும் கொண்டவை. நிரந்தரத் தன்மை எப்போதும் பிறர்நலத்தையும் சமூக நலனையும் நாடி நிற்பது பல்வேறு கலாச்சாரங்களுக்கிடையே ஏற்படும் கலப்பினாலும் விழுமியம் பற்றிய அறிவு மாற்றம் பெறுவதனாலும் விழுமியத்தில் மாறும் தன்மை இடம்பெறுகிறது. இந்த இரண்டு அம்சங்களினாலும் நிரந்தரமான ஒரு வரைவிலக்கணம் விழுமியத்திற்கு அளிப்பது கடினம். ஆயினும் "சிஸ்தம்" என்பவர் "செயல்நெறியைக் காட்டும் வெளிச்சம் விழுமியம்" என்று குறிப்பிட "பிறோஸ் சேர்" என்பவர் விழுமியம் என்பது "கலாச்சாரத்தின் அடிப்படை அம்சம்" என்று கூறுகிறார். இதனை ஞானமுத்து பிலேந்திரர் தனது விழுமியக் கல்வி என்னும் நூலிற் குறிப்பிடுகின்றார்.

மனிதர்களுக்குப் பெருமதிப்பும் பெறுமானமும் கொண்ட பண்புகள் குணஇயல்புகள் நடத்தைகள் அனைத்தையும் மனித விழுமியங்கள் மனித மேம்பாடுகள் என்கிறோம். பிற உயிர்கள் மீது அன்பு காட்டல், பிறர்நலம் பேணுதல், இன்னா செய்யாமை, இவை ஆத்மீகச் செயற்பாடுகள். "உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்" என வள்ளுவர் கூறுவது உயர்வான எண்ணங்



களே. இந்துப் பண்பாட்டில் மனித விழுமியங்கள் அவற்றைத் தழுவியனவாகவே உள்ளன. மனிதனது சிந்தனை தூய்மையானதாக இருக்கவேண்டும். அப்போது தான் மனித விழுமியம் மேலோங்குகிறது.

"மாந்தர்தம் உள்ளத்தனையது உயர்வு...." என்ற குறள் கூறுவதும் இதனையே ஆகும்.

மனித விழுமியத்தில் சத்தியத்தை எடுத்துக்கொண்டால் சத்தியம் என்பதை அறியவும், உணரவும் சத்தியத்தை வாழ்க்கையில் பின்பற்றவும் இவ்வுலகில் மனிதனுக்கு மட்டுமே முடியும். ஏனைய உயிரற்ற படைப்புகளுக்கு இவ்வாற்றல் இல்லை. இந்த வகையில் மனிதன் உயர்ந்து நிற்கிறான். சத்தியத்தை உணர, மனிதன் தனது விவேகத்தையும், உள்ளுணர்வினையும் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். எல்லா விழுமியங்களும் தோன்றுவதற்கு மூலாதாரம் சத்தியம். எனவேதான் வேத உபநிடதங்களில்

"சத்தியம் வத" (எப்பொழுதும் உண்மையே)
"சத்தியம் மேவ ஜயதே" (வாய்மையே வெற்றிபெறும்)
"ந அன்றர் தம்" (பொய்மையால் ஒருபோதும் வெல்லமுடியாது)
என்று கூறப்பட்டுள்ளது.

"வாழ்க்கையில் நலம் பேணல்" எனும் மனித விழுமியக் கருத்தை நோக்கினால் எண்ணம், சொல், செயல் ஆகியவற்றுக் கிடையே ஒருமைப்பாடு இருக்கும் பட்சத்தில் திரி, கரண, சுத்தித் தூய்மையாளர்களே மனித விழுமியங்களைப் பேணுவர். சத்தியத்தினையும் கடைப்பிடிப்பர். பிறருக்குத் தீமை விளைவிக்காத வகையிற் பேசுவது தான் வாய்மை. பண்பான சொற்களைப் பணிவான சொற்களை, பயனுள்ள சொற்களைத் தேர்ந்து பிறருடன் பேசும்போது அச்சொற்கள் பிறருக்குத் தீங்கு விளைவிக்காதவாறு விளங்குகின்றன. மேலும் தவறான வழியில்

வரும் பொருள் பண்டம் என்ற பொருட்கள் ஒருவனது சந்ததியை அழித்துவிடும் என "ஸ்மிருதி" இலக்கியம் கூறுகின்றது.

மனித வாழ்க்கைத்தர உயர்வு என்பதில் மூன்று நிலைகளை, படிகளை நாம் அவதானிக்கலாம். முதல்நிலை எத்துணைச் சிறிதான ஒரு தீமையையும் எவர்க்கும் செய்யா திருத்தல், நேரடியாக மட்டுமன்றி, மறைமுகமாகவும் தீமையை உயிருள்ளவற்றிற்கோ, உயிரற்றவற்றிற்கோ செய் யாமை, இவற்றால் தனக்கு நன்மை ஏற்படுகின்றது என்பதை உணர்ந்து கொள்ளவேண்டும். எனவே, தன் வாழ்க்கையில் உயர்வு பெற்று இன்பமாக வாழ விரும்புபவன் பிற உயிர்களுக்குத் தீமை செய்தலாகாது. பிறருக்குத் தீமை செய்யாமல் இருப்பது எவரு க்கும் இயலக் கூடியது அல்லவா?

வாழ்க்கைத்தர உயர்வின் இரண்டாவது நிலை பிறருக்கு நன்மை நினைப்பது. இன்சொல் வழங்குவது நன்மை செய்வதாகும். "ஈதல்-அறம்" அறம் செய்யவிரும்ப வேண்டும். பின் அறம் செய்யவேண்டும். குடும்பத்தினர் அனைவரும் மனம், வாக்கு, காயம் ஒத்துவிரும்பிச் செய்வதுதான் அறம், பேர், புகழ் விலாசத்திற்காகக் கொடுக்கும் கொடை அறம் ஆகாது. ஈதல் என்பது நீதியும், பொருளும் கொடுத்தல் மட்டும்தான் என்று எண்ணக்கூடாது. பண்பாக, நல்ல இனிய வார்த்தைகள், இரக்கம் கொள்ளுதல் எல்லாமே ஈதல் தாம். எல்லாவித அறங்களும் பிறருக்கு நன்மை பயப்பனவே என்பதை உணர்ந்துகொள்ளவேண்டும். அறங்கள் செய்பவனுக்கும் நன்மையே கிடைக்கும். எனவே, வாழ்க்கைத்தர உயர்வின் இரண்டாவது நிலை பிறருக்கு நன்மை செய்து வாழ்தல்.

மனித வாழ்க்கைத்தர உயர்வின் மூன்றாவதும் இறுதிநிலையும் பிறர் நல்வாழ்வு வாழ்ந்து மகிழ்ச்சி எய்தும்போது நாமும் அம்மகிழ்ச்சியிற் பங்கு கொண்டு மகிழ்வெய்தும் உயர்நில்லையாகும். இதனை அடைவது மிகவும் சிரமந்தான்.



நன்மைக்காகப் பிறருக்குப் பல வழிகளில் நன்மையும் செய்யலாம். ஆனால், பிறரின் நல்வாழ்வைக் கண்டு பொறாமை கொள்ளாது சகித்துக் கொள்வதும், மகிழ்ச்சி கொள்வதும் மிக அரிது. யான் பெற்ற இன்பம் ஏன் அதிலும் கூடுதலான இன்பம் எல்லோருக்கும் கிட்ட வேண்டும் என எண்ணுவதும் அவ்வாறான இன்பங்களை மற்றையோர் பெற்று அனுபவிக்கும்போது அக்காட்சியைக் கண்டு பூரிப்பு அடைவதும் ஆகிய உயர்ந்த நிலையினை நாம் அடைவோமானால் அதைவிட வாழ்க்கைத்தர உயர்வு வேறெதுவுமே இருக்கமுடியாது. நாம் ஒவ்வொருவரும் வாழ்க்கையில் இந்த உயர்நிலையை அடைய முயற்சிக்க வேண்டும்.

"தர்மம் தலை காக்கும்" என்பன நல்லமுறையில் தர்மத்தின் அடிப்படையில் வாழ்பவர்களுக்கு ஒரு பொல்லாப்புமில்லை. எக்கேடும் அவர்களைச் சூழர்து என்பது உறுதி. கண்ணை இமை காப்பது போல, மனிதர்களைத் தர்மமே காக்கின்றது.

"எனக்கு எல்லாம் தெரியும். மற்றவர் சொல்ல நான் என்ன கேட்பது? என்னிலும் பார்க்க மற்றவர்களுக்கு என்ன கூடத்தெரியும்" என்ற ஒருவகை விபரீதமான எண்ணம் கொண்ட வாழ்க்கை நடைமுறை தற்காலத்தில் மக்களிடையெ பெருகி வருவதைக் காணக்கூடியதாக உள்ளது. இது குறிப்பாக இளைய தலைமுறையினர் மத்தியிலே பெரும்பாலும் கொண்டுள்ளது. இதற்குக் காரணம் தானென்ன?

நல்லொழுக்கத்தின் மூலமே மனிதன் மனிதனாகின்றான். நல்லொழுக்கம் இல்லையேல் மனிதனும் விலங்கும் ஒன்று தான். மனித வடிவம் மாத்திரம் மனிதனாக அமைவதற்குப் போதாது. அவ்வாறே கல்வியைக் கற்றுப் பட்டங்களைச் சேர்த்துக் கொண்டால் மட்டும் மனிதனாகி விடமுடியாது. கற்க வேண்டியவற்றைக் கசடறக் கற்று அவற்றின்படி வாழ்க்கையில்

ஒழுகும் போதுதான் அவன் மனிதன் ஆகின்றான். அப்போது தான் சான்றோனாகிறான். சான்றோன் என்பவன் நன்னடத்தை யுள்ளவனே. ஒருவனுக்கு ஒருத்தி. ஒருத்திக்கு ஒருவன் எனும் வாழ்க்கை விழுமியம் குடும்ப வாழ்க்கையைச் சீரர்கவும், செழிப்பாகவும் ஒழுங்காகவும், கௌரவமாகவும் நடாத்துவதற்குப் பேருதவியாக இருந்து வந்துள்ளன. கற்பு என்பது பெண்ணுக்கு மட்டுமன்று ஆணுக்கும் உரியது என்பது சிறந்த விழுமியம் இக்கருத்துக்கள் ஆணுக்குப் பெண் அடிமையென்றோ பெண்ணுக்கு ஆண் அடிமையென்றோ எவ்விதத்திலும் குறிப்பிடுவனவாக இல்லை. ஒழுங்கான குடும்பம், ஒழுங்கான சூழல், ஒழுங்கான பாடசாலைச் சமூகம் என்பவற்றைப் பெற்றுக் கொள்ளுகின்ற பிள்ளைகள் பாக்கியசாலிகள். அவர்கள் நடத்தையில், பண்பில், கருமங்கள் ஆற்றுவதில், நடை, உடை பாவனையில், பழக்கவழங்கங்களிற் சிறந்த ஒழுங்கு முறைகளை மேற்கொள்ளுபவர்கள் மத்தியில் வாழ்ந்து கொண்டு அவர்களை பார்த்து அவர்கள் போன்று நடந்துகொள்வதற்கு வாய்ப்புக் கிடைக்கிறது. அத்தகைய சந்தர்ப்பங்கள் தற்காலச் சூழ்நிலையில் எல்லோருக்கும் கிடைப்பதில்லை. அதனாலேயே அதிகமானோர் ஒழுங்கு என்றால் என்ன என்று தெரியாமல் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

மனிதர்கள் சமூகங்களில் கூடி வாழும்போது சகிப்புத்தன்மை, பொறுமை, விட்டுக்கொடுத்து நடத்தல், புரிந்துணர்தல், ஐக்கியம், மதிப்பு, மரியாதை, பணிவு, இன்சொற் பேசுதல், நேர்மை, உண்மை, விசுவாசம், சட்டங்களை மதித்தல், கடமையுணர்வு, கண்ணியம், மானுடநேயம் பெரியோர்கள் மூத்தோரைக் கனம் பண்ணுதல், பிறர் நலனில் ஆர்வம், சுற்றாடல் மாசடையாது பேணுதல் போன்ற மனித விழுமிய ங்களை அறிந்து அவற்றைக் கடைபிடித்து ஒழுகவேண்டிய தேவை உள்ளது. மனிதகுலம் இன்று எதிர்நோக்கும் பிரச்சினையும் அவற்றிலிருந்து தம்மை மீட்டுக் கொள்ள வழிவகை தெரியாது தத்தளிப்பதற்குக் காரணம் மனித



விழுமியங்களை வாழ்க்கையில் கடைப்பிடிக்காமையேயாகும். "கையிற் புண்ணுக்குக் கண்ணாடி தேவையில்லை" என்பர். அது இங்கும் பொருந்தும். மனிதர்களிடம் எல்லாம் உண்டு. மனிதத்தன்மையைத் தவிர என்ற நிலையைப் பெரும்பாலும் அடைந்து கொண்டிருக்கிறது. இந்த நிலைமாறவேண்டும்.

மனித விழுமியங்கள் மீளப் பெறப்படவேண்டும். மனித விழுமியங்கள் மனித குலத்தின் மதிப்பு மிக்க அரும்பெரும் சொத்து. அவற்றைக் பேணி இத்தலைமுறையினருக்குக் கையளிக்க வேண்டும். இதனை உணர்ந்து அனைவரும் விரைந்து செயற்பட வேண்டும். "எந்தக் குழந்தையும் நல்ல குழந்தைதான் மண்ணிற் பிறக்கையிலே...." என்று கீழைத்தேயக் கவிஞனின் கருத்தும் "மனிதன் இயற்கையில் தீயவனாக பிறப்பதில்லை". சமூகத்தின் குறைபாடுகளே அவனை தீயவனாக்குகின்றன எனும் மேலைத்தேயச் சிந்தனையாளர் ருசோவின் கருத்தும் ஒப்பு நோக்கத்தக்கது.

"சான்றோர்கள் இல்லாத ஊர் ஊரல்ல. அது அடவிகாடே" என்றார். மனிதர்கள் வாழத் தகுந்த இடமன்று. நல்ல கல்வியைக் கற்பதனால் எய்தப்படுகின்ற பயன் நடுவுநிலைமை எனும் நற்பண்பினைப் பெறுதலும் அவ்வாறு ஒழுகுதலும் ஆகும்.

"....................நெஞ்சத்து
நல்லையாம் என்னும் நடுவு நிலைமையால்
கல்வியழகே அழகு"

என்கிறது நாலடியார். எல்லாவகை அழகுகளுக் குள்ளும் கல்வியழகே ஒருவருக்கு மிகுந்த அழகையும் சிறப்பையும் தருவது எதனால் என்று ஆராயின், நெஞ்சத்தில், வாக்கில், செய்கையில் ஒருவர் நடுவு நிலைமையில் நிற்கக் கல்வி துணை செய்வதாகும். இவ்வுலகம் நிலைத்து நிற்பதற்கு

முன்னோர் செய்த நன்மைகளே. இதனை வள்ளுவர்

"நல்லார் ஒருவர் உளரேல் - அவர் பொருட்டு
எல்லார்க்கும் பெய்யும் மழை"

என்று கூறப்படுகின்ற குறளில் இருந்து அறிந்துகொள்ளமுடியும்

மனித விழுமியத்தின் ஓர் உயர்ந்த அறவிழுமியத்தினை மகாபாரதத்தில் காண்கின்றோம். போர் தொடங்குவதற்கு முன்பே அந்த நாட்டிலுள்ள மூத்தோரையும், குழவி, பசு, பத்தினிப்பெண் போன்றோரை முரசறைவித்து நாட்டிலிருந்து வெளியேற்றிய பின்பே போரைத் தொடருவார்கள். மதுரையை எரிக்க தீக்கடவுள் வந்தபோது அக்கடவுளிடம் கண்ணகி,

"பார்ப்பனர், அறவோர், பசு, பத்தினிப்பெண்டிர், மூத்தோர் குழவியெனுமிவரைக் கைவிட்டுத் தீத்திறத்தார் பக்கமே சேர்கவென்று" கூறப்படுகின்றது.

போர்க்களத்தில் நிராயுதபாணியாக நின்ற இராவணனை "இன்று போய்ப் போருக்கு நாளை வா......" என்ற சிறந்த அறத்தினையும் உயர்ந்த விழுமியத்தினையும் காட்டுகிறது.

சாதி, குலம் என்பதும் மனிதன் செய்த சதி என்பதே சித்தர் கொள்கையாகும். பிறப்பினால் உயர்வு தாழ்வு வருவதில்லை. மனிதரது செயல்களே அவர்களது உயர்வினை நிர்ணயிக்கின்றன. அதனால் தெய்வமும் ஒன்று அத்தெய்வத்தின் முன் சகல மாந்தரும் ஒன்று தான் என்ற உண்மையினைத் திருமந்திரப் பாடல் புலப்படுத்துகின்றது.

"ஒன்றேகுலம் ஒருவனே தேவன்
நன்றே நினையின் நமனில்லை நாளுமே....."

என மனித சமத்துவத்தின் உயர்வினை எடுத்துக் காட்டியது.



"ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு" என்றார் பட்டினத்தார். "நட்டகல்லும் பேசுமோ நாதன் உள்ளிருக்கையில்" என்பது சிவவ்வாக்கியார் போதனை. "உள்ளக் கமலமடி உத்தமனார் வேண்டுவது" என விபுலானந்த அடிகளும் விளம்பினார்

"தெய்வம் பலப்பல சொல்லிப் பகைத்தீயை வளர்ப்பவர் மூடர்" என்கிறார் பாரதியார்.

"மனத்தினாலும் பிறர்க்குத் தீங்கு செய்யாதவன் இந்து ஆவான்." "தன்னுடைய வாழ்வை மற்றவனுக்கு அர்ப்பணித்தல் தொண்டு" என்று மனிதமேம்பாட்டுச் சிந்தனைக் கருத்துக்கள் சமய இலக்கியத்தில் விரவிக் காணப்படுகின்றன. மனித மேம்பாட்டில் ஆலயம் சிறந்ததொரு பொக்கிஷ நிலையமாகக் கொள்ளப்படுகின்றது. சிவாச்சாரியார்-மந்திரம், பக்தி, பாவனையூடாகத் தன்னை இறைவனாகப் பாவனை செய்து கொள்கின்றான்.

"நெஞ்சமே கோயில் நினைவே சுகந்தம்" எனக் கூறப்பட்டுள்ளது. இத்தகைய மேம்பாட்டுச் சிந்தனைகள் அனைத்தும் மூல இலக்கியமாகிய வேதத்தில் "ரிதம்" பற்றிய கருத்திலிருந்து தோற்றம் பெற்று வளர்ச்சியடைந்தன எனலாம்.

**சைவபூஷணம் இரா. சாந்தகுமார்**

# அமரர் சிதம்பரி செல்லத்துரை(பப்பா)
## அவர்களின் நினைவு மஞ்சரி

பிறப்பவர்கள் எல்லோரும் சுயநலமற்ற பொதுப்பணி புரிந்து புகழ்பெறுவது மிக அரிது. மக்களுக்கு சேவையாற்றுபவர்கள் மறைந்திருந்தே பணிபுரிவர். அவர்கள் சேவைக்கு சமுதாயத்தில் நிலையான ஓரிடமுண்டு. தமது தன்னலமற்ற அடக்கமான சேவையால் இத்தகைய இடத்தை தனது சமூகத்தில் பெற்றுக்கொண்டவர் பப்பா.

**மண்ணில் மலர்ந்த மலர்**

யாழ் நகரில் கட்டப்பிராய் என்னும் ஊரில் சிதம்பரி சின்னம்மாவின் மூத்த புதல்வராக அமரர் சி. செல்லத்துரை 1922.05.03ம் திகதி மலர்ந்தார். அமரர் வல்லிபுரம், அமரர் கதிரேசு ஆகிய இருவர் இவரது உடன்பிறந்தோர். இவர் தனது கல்வியைக் கல்வியங்காடு செங்குந்தா இந்துக் கல்லூரியில் பயின்றார். சிறுவயதில் இருந்தே அன்பு, கருணை, எப்போதும் சிரித்த முகம், மற்றவர்களை மதிக்கின்ற பண்பு, விட்டுக்கொடுப்பு, எளிதாகப் பழகும் இயல்பு என்பன நிறையப் பெற்றவர் பப்பா.

**தொழில் முயற்சி**

நாம் மற்றவர்களுக்கு உதாரணமாக வேண்டும் என்ற நோக்கோடு கல்வியைத் தொடர்ந்து தொழில் முயற்சியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். அவர் கொழும்பு, இரத்தினபுரி, காவத்தை போன்ற இடங்களில் சேவையாற்றியவர். பணம் சேர்ப்பதை மட்டும் செய்யவில்லை. நல்ல மனங்களையும், சேர்த்துக் கொண்டார். சமூகத்தில் இருக்கின்ற தீய செயல்களுக்கு, தீய பழக்க வழக்கங்களுக்கு அடிமைப்படாது வாழ்ந்து காட்டியவர். பலரின் முயற்சிக்கும், செயல் திறமைக்கும் வழிகாட்டியாகத் திகழ்ந்தார் பப்பா.



**இல்லற வாழ்வில்**

அரியாலை சபாபதி முத்துப்பிள்ளை அவர்களின் மகளான நவமணியினை தனக்குக் கிடைத்த சொத்தாகக் கருதி 1950ம் ஆண்டு திருமண பந்தத்தில் இணைத்துக் கொண்டார். நவமணியினைத் திருமணம் செய்த நாள் முதலாய் இல்லற வாழ்வுக்கு இலக்கணமாய் வாழ்ந்து காட்டியதோடு ஏழு மழலைகளையும் பெற்றெடுத்தார். புஸ்பநாதன் (டுபாய்), புஸ்பவனிதா (இலங்கை), தேவமலர் (கொழும்பு), புஸ்பானந்தன் (இலங்கை), புஸ்பாகரன் (கொழும்பு), புஸ்பறூபன் (ஜேர்மனி), புஸ்பராதா (லண்டன்) என்போர்கள் ஆவர். பிள்ளைகளுக்கு பருவத்தில் செய்யவேண்டிய கடமையினைச் சிறப்பாக நிறைவேற்றி மகிழ்ந்தார் பப்பா.

**பிள்ளைகளுக்குக் காட்டிய பாதை**

"வையத்தில் முந்தியிருக்கவேண்டி" தன் பிள்ளைகளை கண்ணும் கருத்துமாக இருந்து வளர்த்துப் பெருமைபெற்றவர் அவர். மகன் புஸ்பநாதன் அவர்களுக்கு மட்டுவில் பதி சிதம்பரி நல்லம்மாவின் மகள் மல்லிகாவைத் திருமணம் செய்து வைத்து மகிழ்ந்தார். அவர்களின் அன்புச் செல்வங்கள் பவிஜா (டுபாய்), மயூரன் (லண்டன்), சர்மினி (டுபாய்), வினோதா (டுபாய்), ராஜ்மோகன் (டுபாய்) ஆவார்கள். பவிஜாவின் வாழ்க்கைத் துணைவர் சந்திரகாந்தன் ஆவர். இவர்களின் அன்புச் செல்வம் லக்ஷன், சர்மினியின் வாழ்க்கைத் துணைவர் நந்தகுமார் (கனடா) ஆவார்.

புஸ்பவனிதா அவர்களுக்கு சங்கத்தானைப் பதி தில்லையம்பலம் சின்னம்மாவின் மகன் சின்னத்துரை அவர்களை திருமணம் செய்து வைத்தார். அவர்களின் அன்புச் செல்வங்கள் ரபீரா (கண்டி), சோபிதா, வாகீஸ் (டுபாய்) ஆவார். ரபீராவின் வாழ்க்கைத் துணைவர் செல்வக்குமார் ஆவார். இவர்களின் அன்புச் செல்வங்களாக சந்தியா, சங்கீதா இருக்கிறார்கள். சோபிதாவின் துணைவர் சத்தீஸ் ஆவார்.

தேவமலர் அவர்களுக்கு நுணாவில் பதி அப்பையா சின்னம்மாவின் மகன் மகேந்திரன் அவர்களுக்கு திருமணம் செய்து வைத்து மகிழ்ந்தார். புஸ்பானந்தன் அவர்களுக்கு புத்தூர் பதி கனகலிங்கம் மோகனமலா தம்பதியனரின் மகள் கிருஸ்ணசுகி அவர்களைத் திருமணம் செய்து வைத்தார். அவர்களின் பிள்ளைகள் ஜசிராஜ், கமல்ராஜ் ஆவார்கள்.

புஸ்பாகரன் அவர்களுக்கு மிருசுவில்பதி அந்தோனிப் பிள்ளை தங்கமலர் தம்பதியினரின் அன்பு மகள் தெய்வேந்திர ராணி அவர்களைத் திருமணம் செய்துவைத்து மகிழ்ந்தார். இவர்களின் அன்புச் செல்வங்கள் சஜீதா, சஜீகாந், அனுஜன் ஆவார்கள். சஜீதாவுக்கும் கமல்ராஜுக்கும் பதிவுத்திருமணம் நிறைவுபெற்றது.

புஸ்பராதா அவர்களிற்கு மாவிட்டபுரப்பதி சிவபால சிங்கம் புஸ்பமலர் மகள் சுதாஜினியைத் திருமணம் செய்து வைத்து நிறைவு கண்டார். இவர்களின் அன்புச் செல்வங்கள் தினிஷா, ரோனிஷா ஆவார்கள்.

மக்கள், மருமக்கள், பேரப்பிள்ளைகள், பூட்டப்பிள்ளை களை அன்புப் பார்வை மூலம் தன்வசமாக்கிக் கொண்டவர் பப்பா.

**சமூக சமயப் பணியில்**

இவர் எந்தவொரு செயலிலும் பின்னில்லாது முன்னின்று செய்யக்கூடிய திறமையும், தாம்பத்திய குணமும் கொண்டவர். அரியாலையில் நிறைவான வேலையைச் செய்துவரும் காசிப்பிள்ளை அரங்கு, சரஸ்வதி மத்திய நூல் நிலையம் ஆகியவற்றின் வளர்ச்சிக்காக இவர் உதவிகள் புரிந்துவந்தார்.



சந்நிதி முருகன் ஆலயத்தினதும், அரியாலை பிரப்பங் குளம் மகாமாரி அம்மன் ஆலய வளர்ச்சிக்கும் இவர் தொண்டாற்றியுள்ளார்.

**முதியோர் நிலையில் பெற்ற கௌரவம்**

2005/2006/2007ம் ஆண்டுகளில் முதியோர் தினத்தை முன்னிட்டு நடாத்தப்பட்ட போட்டிகளில் பரிசுகள் பெற்றதுடன் பொன்னாடை போர்த்தி கௌரவிக்கப்பட்டார்.

**அனுபவ, சிந்தனை வழிகாட்டி**

தான் மட்டும் வாழ்ந்தால் போதாது மற்றவர்களையும் வாழ வைக்க வேண்டும் என்றும் பிள்ளைகளை நல்ல நிலைக்கு இட்டுச்செல்ல வேண்டும் என்றும் அவர்கள் . மூலம் சமூக வளர்ச்சிக்கு உந்துசக்தியாக விளங்கினார். பிள்ளைகள், பேரப்பிள்ளைகள் கல்வியில் உயர்ச்சியடைய வேண்டும், உயர் பதவி வகிக்கவேண்டும், சமூகத்தின் முன்னேற்றத்தில் பங்கு கொள்ள வேண்டும் என்ற சிந்தனையுடன் அவர்களை வளர்த் தார் பப்பா.

**விண்ணில் சென்ற மலர்**

அழிக்க முடியாததுதான் உயிர். அவ்வுயிரானது தாம் பெற்ற வாடகை வீடான உடலை 2008.02.08ம் திகதி வெள்ளிக்கி ழமை பிரிந்து சென்றது. இந்த நிகழ்வு மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவருக்கும் "வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்" என்பதை நினைவுப்படுத்தியுள்ளது.

முற்று

**சைவபூஷணம் இரா. சாந்தகுமார்**

யாழ். அரியாலைப்பதி

# பண்பாளர் சிதம்பரி செல்லத்துரை

## ஞாபகார்த்தம் புலமைப்பரிசில் நிதியம்

எங்களின் பாசமிக்க தந்தையாரின் நினைவுக் கலசமாக "சைவ நற்சிந்தனை" என்னும் நூலை 09.03.2008ம் திகதி அன்று நடைபெறும் அன்னாரின் ஞாபகார்த்த நிகழ்வுக் கூட்டத்தில் வெளியிடவுள்ளோம். அத்துடன் அவரின் பெயரால் ஞாபகார்த்தப் புலமைப்பரிசில் நிதியம் ஒன்றையும் அன்றைய நிகழ்வின் ஒரு அங்கமாக அங்குரார்ப்பணம் செய்து வைக்கவுள்ளோம்.

**"யாழ் அரியாலைப்பதி பண்பாளர் சிதம்பரி செல்லத் துரை ஞாபகார்த்தப் புலமைப்பரிசில் நிதியம்"**

என்னும் பெயரில் ஆரம்பிக்கப்படும் நிதியத்திற்கு 25000/=ம் ரூபாவை ஆரம்ப நன்கொடை மூலதனமாக அன்னாரின் பிள்ளைகள் ஆகிய நாங்கள் வழங்கவுள்ளோம்.

இம்மூலதன நிதியைப் பாதுகாக் கவும், முதலீடு செய்து வருமானத்தைச் சேமிக்கவும், வருடாந்த வருமானத்தை உதவி வேண்டி நிற்கும் பிள்ளைகளின் கல்வி வளர்ச்சிக்குப் பயன்படுத்துவதற்குமான பொறுப்பு 1999ம் ஆண்டு 52ம் இலக்க புனர்வாழ்வு-கல்வி அபிவிருத்தி நிதியப்பணிப்பாளர் சபை சட்டத்தினால் கூட்டிணைக்கப்பட்ட புனர்வாழ்வு-கல்வி அபிவிருத்தி நிதியத்திடம் ஒப்படைக்கப்படும்.

புனர்வாழ்வு-கல்வி அபிவிருத்தி நிதியத்தின் ஏற்றமிகு சமூகக்கல்விப் பணிகளுக்கு எங்களின் நன்றியறிதலையும், பாராட்டையும் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

இங்ஙனம்,
**மனைவி : செ. நவமணியும்**
**பிள்ளைகள் குடும்பத்தினரும்**
**09-03-2008**